# உதயம்

## ஜெயகாந்தன்





மீனாட்சி
புத்தக
நிலையம்

# உதயம்



## ஜெயகாந்தன்

மீனாட்சி புத்தக நிலையம்
மயூரா காம்ப்ளக்ஸ்
48, தானப்பமுதலி தெரு,
மதுரை–625 001

முதல் பதிப்பு : 1954
இரண்டாம் பதிப்பு : டிசம்பர், 1995
மீனாட்சி : 247


விலை : ரூ. 18-00

MEENAKSHI PUTHAKA NILAYAM
Mayura Complex
48, Dhanappa Mudali Street
Madurai—625 001

அச்சிட்டோர்:

அலைகள் அச்சகம்
36, தெற்குச் சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-600024.

# முன்னுரை

''உங்கள் ஆரம்ப காலச் சிறுகதைகள் முதல் அண்மையில் எழுதிய அனைத்தும் புத்தக வடிவில் கிடைக்கின்றன. ஆனால் உங்கள் முதல் தொகுதி யான உதயம் மறுபதிப்பு வரவில்லையே ஏன்?'' என்று சில மாதங்களுக்கு முன் வெளியான ஒரு பேட்டியில் என்னிடம் கேட்கப்பட்ட கேள்விக்கு,

''குறிப்பாக ஏதும் காரணம் இல்லை. இது பற்றி எனது பதிப்பாளரிடம் கூறுகிறேன்'' என்று பதில் சொல்லியிருந்தேன்.

விடுவாரா நமது பதிப்பாளர்? 'உதயம்' சிறுகதைத் தொகுதியை எங்கோ தேடிப் பிடித் துக் கொண்டு வந்து இந்தப் பதிப்புக்கு ஒரு முன்னுரை எழுதிக் கொடுங்கள் என்றார். அதன் விளைவே, நாற்பத்தியொரு ஆண்டுகளுக்கு முன் வெளியான எனது முதல் சிறுகதைத் தொகுதி யின் இரண்டாம் பதிப்பான இந்நூல்.

வாழ்க்கையின் அனுபவங்களைப் பெறுவதற்கு முன்பாகவே எனது பதினைந்தாவது வயதில் பிறரின் உந்துதலால் எழுதத் தொடங்கியவன் நான்.

எனது ஆசிரியர்கள் — நண்பர்கள் —தோழர்கள் என்மீது கொண்ட அன்பினாலும் நம்பிக்கையினாலும் ஏற்பட்டது அந்த ஊக்கம்.

1952-இல் ஜனசக்தியிலிருந்து விலகி மதுரை சென்று ஓராண்டுக் காலத்துக்குப் பிறகு கும்பகோணம் வந்து தோழர் இஸ்மத் பாஷாவுடன் சமரன் பத்திரிகையில் பணியாற்றிய காலத்தில் சமரனில் எழுதிய கதைகளில் சிலவும் 1955-இல் சென்னை திரும்பி, ஹனுமான் பத்திரிகையில் ஆசிரியராகப் பொறுப்பேற்றிருந்த தோழர் விஜய பாஸ்கரனின் தூண்டுதலால் ஹனுமான் பத்திரிகையில் எழுதிய சில சிறுகதைகளும் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன.

ஒருமுறை தமது ஆரம்ப காலச்சிறுகதைகளுக்கு முன்னுரை எழுதிய ஜார்ஜ் பெர்னார்ட்ஷா,

''ஆரம்பத்தில் தவளைக்குஞ்சுகள் மீன் குஞ்சுகளைப் போலத் தானிருக்கும். அதுபோல் என் ஆரம்பகாலக் கதைகள் 'மீன் குஞ்சு'களாக இருப்பதற்கு நான் பொறுப்பில்லை'' என்றாராம்.

''அதைப் போல் சொல்லி நான் தப்பித்துக் கொள்ளப் போவதில்லை. இவை மீன் குஞ்சு

களாகத் தோற்றமளிப்பினும் பின்னால் உருவாகப் போகும் தவளையை உள்ளடக்கிக் கொண்டிருக்கும் தவளைக் குஞ்சுகள்தாம்'' என்று தமது ஆரம்ப காலச் சிறுகதைகளைக் குறித்துப் புதுமைப்பித்தன் எழுதியிருக்கிறார்.

நானும் அதையே திரும்பச் சொல்ல வேண்டுமோ என்று எனக்குத் தோன்றுகிறது.

இந்தக் கதைகள் வெளிவந்த சமயத்தில் எனது நண்பர்கள் என்னைப் பாராட்டினார்கள். இவற்றைப் புத்தகமாக வெளியிட அவர்கள் செய்த உதவிகளை இப்போது எண்ணிப் பார்க்க சுகமாக இருக்கிறது.

எழும்பூர் ஹைரோடில் ஒண்டுக் குடித்தன வாசியாக இருந்தபோது ஒரு மலையாளி நண்பர் உண்ணிக்கிருஷ்ணனும் இன்னொரு மராத்தி நண்பர் ராமச்சந்திரனும் பண உதவி செய்து காகிதம் வாங்கித் தந்தனர். எனது மாமா பாகஸ்தராக இருந்த பவானி பிரஸ் எனும் அச்சகம் அங்கே இருந்தது. எனக்கு அக்காலத்தில் ஓரளவு அச்சுக்கோர்க்கும் தொழில் தெரிந்திருந்தது. எனக்கு உதவியாகவும் வழிகாட்டியாகவும் ஓய்வு பெற்ற ஃபோர்மேன் நாயுடுவும் இருந்தார். நாலு நாலு பக்கங்களாக அச்சேற்றும் வசதி படைத்த, காலால் உதைத்து இயக்கும் 'டிரெடிலு'ம் இருந்தது. நானே அச்சுக்கோர்த்து, அச்சேற்றி, டிரெடிலில் மிதித்து சொந்த உழைப்பில் உருவாக்கியது இந்த உதயம் தொகுதியின் முதல் பதிப்பு.

அந்த முதல் பதிப்புக்கு ஒரே வண்ணத்தில் அட்டைப்படம் வரைந்து உதவிய ஓவியர் ஆனந்தன் அவர்களே நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு வெளிவரும் இந்த இரண்டாம் பதிப்புக்கும் அட்டைப்படம் வரைந்திருக்கிறார் என்பது மகிழ்ச்சி தருகிறது.

அக்காலத்தில் உலக சமாதான இயக்கம் தோன்றி அதில் நான் பணியாற்றினேன். அப் போது ஓர் உருவகக் கதை எழுதத் தோன்றியது. அதுவே சாந்தி சாகரம்.

சென்னை நகரத்தில் அப்போது கை ரிக்ஷாக் கள் நிறையவே இருந்தன. மனிதனை மனிதன் சுமக்கும் அந்த நகர்ப்புற நாகரிகம் என் மனத்தை வெகுவாக உறுத்தியது. ரிக்ஷாக்காரர்களை வைத்து நான் பல கதைகள் எழுதியிருக்கிறேன். தற்போது கை ரிக்ஷாக்கள் முற்றாக ஒழிக்கப் பட்டு விட்டன கதைகளுக்கு ஒரு நோக்கமும் அதன் நிறைவேற்றமும் கூட உண்டு என்று கால வளர்ச்சியில் கண்டு கொண்டேன். அதற்கு ஓர் அடையாளம் 'சுமைபேதம்.'

'உதயம்' எந்தப் பத்திரிகையிலும் வெளி வராத கதை. சொற்களின் மீது எனக்கிருந்த மயக்கம் இந்தக் கதையில் தெரிகிறது.

கண்ணன் பிறந்தான், மீனாச்சி ராஜ்யம், காந்தி ராஜ்யம் ஆகியவை ஹனுமானில் பிரசுர மானவை.

இருபது வயதுகூட நிரம்பாத ஓர் இளைஞ னின் அக்கால மனநிலையை இவ்வளவு காலத்

துக்குப் பிறகு திரும்பிப் பார்க்கிற ஓர் அனுபவத்தை இந்த இரண்டாம் பதிப்பு எனக்குத் தருகிறது.

இந்த இரண்டாம் பதிப்புக்கும் இனிவரும் பதிப்புகளுக்கும் காரணமான நண்பர் செல்லப்பன் அவர்களுக்கு எனது தனித்த நன்றி உரியது.

சென்னை—78 **த. ஜெயகாந்தன்**

30-12-95

# உள்ளே...

பக்கம்

- சாந்தி பூமி 9
- சுமை பேதம் 20
- கண்ணன் பிறந்தான் 27
- உதயம் 39
- பிழைப்பு 58
- மீனாச்சி ராஜ்யம் 70
- காந்தி ராஜ்யம் 78

# சாந்தி பூமி

**அவள் சமாதான தேவதை !**

**அவளே ஊழிக்கால உருத்திர தேவி! அவன் பாட்டாளி !**

**சாந்தி சாகரத்தின், சாந்தி பூமியின் ஏகச்சக்ராதிபதி !**

---

கதிரவன் பிரபஞ்ச யாத்திரைக்கு ஆயத்தமாகிறான். நீலக்கடலும் நெடிய வானும் தழுவி நிற்கின்றன. கீழ் வானத்தின் கடைக்கோடியில் செந்நிறம் பெற்ற மேகக் கீறல்களுக்கிடையில் தாராகணங்கள் மின்னுகின்றன. கடல் மடியில் வெண்ணுரை 'பளீ' ரிடச் சிரித்து விளை யாடுகிறாள் அலைமகள். தென்றல் ஒயிலாக நடை பயில் கிறாள். கடலில் வெகு தூரத்தில் மழை பெய்கிறது.

கதிரவனைக், கார்மேகம் கவ்வி விழுங்க முயல்கிறது. 'சிலு சிலு' வென குலுக்கி நடக்கிறாள் தென்றல்.

''ஏ ! தென்றலே... எங்கே ஓடுகிறாய்... உனக்கேன் இத்தனை வேகம்... என்னோடு இரேன்... ஊஹூம்... உன்னை விடமாட்டேன்'' என்று துள்ளிக் குதித்துத் தென்றலைத் தழுவுகிறாள் அலைமகள்...

''அடி, பைத்தியமே நமக்கெல்லாம் ஓய்வு ஏது... நமது உழைப்பில் தான் நாம் உருவம் பெறுகிறோம்... நீர் சலன மற்று இருந்தால் அதற்கு அலையென்ற பெயர் ஏற் படாதே... என்னை விடு நான் போகிறேன்...'' என்று படபடப்போடு கூறிவிட்டு மீண்டும் தவழ்ந்து விரை கிறாள் தென்றல்.

பேய்நிழல் போல் புரண்டு, தன்னைக் கவ்வி விழுங்க வந்த கார்மேகத்தை, பல கூறுகளாகச் சிதைத்து, தனது ஒளிக்கரங்களை உயர்த்தி மேலெழுகிறான் கதிரவன்.

கடற்கரையை அடுத்த ஒரு தென்னந்தோப்பு. தென்றலின் வருகையால் ஆனந்த ஆட்டம் போடுகின்றன தென்னை மரங்கள். தென்னந்தோப்பை அடுத்து ஒரு மலர்ச்சோலை அதனருகே ஒரு குன்று.

சோலைக்குள், மல்லிகையும் சண்பகமும் தறிகெட்டு வளர்ந்து மண்டிக் கிடக்கின்றன சோலை நடுவே ஓர் அழகிய சிறிய தடாகம்... அதைச் சுற்றிலும் பன்னீர் மரங்கள் வெண்ணிற மலர்களை உதிர்க்கின்றன. மல்லிகையின் இதழ்களில் பனி நீர் மின்னுகிறது. அடர்த்திமிக்க மாவிலைச்செறிவினூடே—சிகப்பும் பச்சையுமாய் ஒளி வீசும் கனியாக் கனிகள் தொங்குகின்றன. அணில்கள் 'சலசல'த்து அங்கும் இங்கும் ஓடுகின்றன. ஓங்கி உயர்ந்த வேம்பின் வேர்ப்பாதத்தில் நட்சத்திரங்கள் உதிர்ந்து திரவிக் கிடப்பது போல் வெண்மை. 'கீ கீ' என்ற கிளிகளின் பேரிரைச்சல்.

''அக்கூவ்... அக்கூவ்'' வென்று வெகு நேரமாய் கூவும் விடாய் தீராத குயிலினம்.

தென்றல் அந்த மோகனப் பூங்காவில் நுழைகிறாள். மலர்களும் தழைகளும் மழையாய்ப் பொழிந்து உஷா தேவிக்கு வரவு கூறுகின்றன.

சோலை நடுவே ஒரு பளிங்குமேடை! அதன் மீது மூவர் உறங்குகின்றனர்-

ஒரு தாய் இரு புதல்வர்கள்.

அவர்கள் மூவரையும் தென்றல் தன் அன்புக் கரங்களால் தழுவுகிறாள். அவர்களின் ஆடைகள் 'படபட'க்கின்றன.

அன்னை விழித்து, தன் புதல்வர்களை எழுப்புகிறாள்.

அவள் முகத்தில் எல்லையற்ற சாந்தியின் நிறைவு. எவ்வளவோ வயதானவள்தான் என்றாலும் இளமை குன்றாதவள்; மெருகு குலையாதவள்.

அவளுடைய சிகைதான் கார்மேகம்; அவளுடைய தோழன் கதிரவன்; அவளுடைய விளையாட்டுத் தோழி தென்றல். அவள் சிருஷ்டியின் மகாமேதத்வங்கள்தான் வானவெளியும் அதிற் சுழலும் கிரகங்களும், வானவில்லும் அதன் சோபையும், தென்றலும் சுகமும், பூமியும் அதில் அவள் சொரிந்த அழகும், நிலவும் முகிலும், மலையும் கடலும் யாவும் அவளுள் அடக்கம்.

அவள், பொறையின் உறைவிடம்! மென்மையின் உரு! கருணையின் வடிவம்! அன்பின் சிகரம்! ஆனந்தமே அவள் இலட்சியம். அவள் பிருகிருதி தேவி.

அவள், விதி வசமாகவோ, அறியாத்தனமாகவோ ஒரு கொடியவனை மணந்தாள். அவனால் தென்றல் புய லாயிற்று.

அவன், அக்கினியை மலையினுள் புகைத்து அழகை அழித்தான். கடலைக் கலக்கி நாசமூட்டினான். கார்மேகத் தின் அழகான மின்னலைக் கொடிதாக்கி, இடியென கோரக் களியோடு நகைத்தான். அன்னையின் சிருஷ்டி களைச் சிதைத்து அழகை அழித்து எட்டு திக்கிலும் எக் காளமிட்டுச் சிரித்துத் திரிகிறான்.

அவனுக்கும் அவளுக்கும் தீராப்பகை. அவனிடம் அவள் இருபுதல்வர்களைப் பெற்றாள். அன்னையின் சாயையில் ஒருவன்... அந்தக் கொடியவனின் அவதாரமே போன்று மற்றொருவன்.

மூத்தவன் முரடன்— இளையவன் அவனுக்கு நேர் மாறானவன். அவர்களிருவரையும் வைத்துக்கொண்டு அன்னை, படாத பாடுகள் பட்டாள்.

கண் விழித்த அன்னை, புதல்வர்களை எழுப்பி அணைத்து முத்தமிடுகிறாள்.

அவள் தன் புதல்வர்கள் இருவரையும் ஒன்றாகத்தான் பாவித்தாள். ஆனால் அவர்கள் தன்மையில் வேறுபட்ட வர்கள் என்றும் அவளால் உணர முடிந்தது.

அதோ மூத்தவன், வருகிறான். அவன் கண்களில் என்ன குரூரம்! நெற்றியில் சுருள் சுருளாகக் கேசம் புரள்கிறது. அதனிடையே நெரித்த புருவ வளைவுகள். மேலேறி நோக்கி வெறியோடு விழிக்கும் விழிகள். உள்ளத்தே எதையோ நினைத்துக் கருவி, உதட்டைக கடிக்கிறான். முகம் சிவக்க இளையோனைப் பார்க்கிறான். அவன் இடையில் குரூரமான கட்டாரி; அது அவன் விளையாட்டுப் பொருள்!

இளையவன், கைநிறைய மலர்க் கொத்துக்களைத் தாங்கி நிற்கிறான். கண்களில் கள்ளமற்ற குறுகுறுப்பு; அகன்ற நெற்றி, பால்வடியும் வதனம், பவள உதடுகள், அவன் தோள் மீது புறா ஒன்று உரிமையோடு வந்து அமர்ந்திருக்கிறது. அவனைச் சுற்றி முயல் குட்டிகள் துள்ளிக் குதித்தோடுகின்றன. மயிலொன்று அவனருகே அழகுற நடம் புரிறது. அவற்றுடன் அவன் விளையாடுகிறான்.

மூத்தவன் மரத்தடியில் கோபத்தால் சிவந்த விழிகளுடன் ஒரு பெரிய கழுகை அணைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான். அதுவும், அவனைப் போலவே, சமயம் பார்த்து ஏமாறும்பொழுது அந்த வெண்புறாவை. தன் கோர நகங்களுக்கிடையே நெரித்துக் கொன்று, தன் கூரிய அலகால் அதன் வயிற்றைக் கொத்திப் புசிக்க, கண்களில் கரை தத்திப் புரளும் ரத்த வெறியுடன் பார்க்கிறது.

மூத்தவன் தன் கரத்திலிருக்கும் கட்டாரியால் மல்லிகைக் கொடியின் வேர்களைக் கல்லி எறிகிறான். பழுக்காத மாம்பிஞ்சுகளை கல்லெறிந்து வீணாக்குகிறான், சண்பகத்தையும் மல்லிகையையும், மிதித்துத் துவைக்கிறான்... மண்ணை வாரி வீசிப் புழுதி கிளப்புகிறான். அவன் மேனி முழுதும் புழுதி படிந்து அலங்கோலமாக நிற்கிறான்.

இளையவன் சற்று தூரத்தில் குன்றின் அடிவாரத்தில் பாறையொன்றின் மேல் அமர்ந்து குழலில் மோகன கானம் பொழிந்து பரவசமடைகிறான்.

குழலிசை வரும் திக்கை நோக்கி வெறித்து விழிக்கிறான் மூத்தவன். பற்களை 'நறநற' வெனக் கடிக்கிறான். ஹூம் என்று சீறி, தன் கையிலுள்ள கட்டாரியால் வேப்ப மரத்தின்மீது 'சதக்'கெனக்குத்தி இழுக்கிறான்.

''டேய்... மடையா!... என்ன சப்தம் செய்கிறாய்...'' என்று இளையவனை நோக்கிக் கத்துகிறான்.

குழலிசை திடீரென நிற்கிறது.

அவன் சத்தத்தைக் கேட்டுப் புறாவும் கிளியும் பயத்தால் உடல் நடுங்குகின்றன.

''அண்ணா... உனக்கேன் இத்தனைக் கோபம்...? இதென்ன விளையாட்டு... அழகான மல்லிகைச்செடியைப் பாழ்செய்து விட்டாயே... மாங்காய் பழுத்தால் எல்லோரும் புசிக்கலாமே... பிஞ்சிலேயே உலுக்கிவிட்டாயே. உன் மேலெல்லாம் புழுதி நிறைந்திருக்கிறதே! அட அண்ணா. உனக்கே இது நன்றாக இருக்கிறதா...'' என்று குழைவாகக் கூறுகிறான் இளையவன்.

''ஓ!... பெரிய மேதாவி... புத்தி சொல்ல வந்துட்டான்... மரியாதையாகக் கிட நாயே! இன்னொரு முறை புல்லாங்குழல் சத்தம் கேட்டதோ... அப்புறம் தெரியும் சேதி! நீயும் உன் புல்லாங்குழலும்...''

''ஏன்? நான் புல்லாங்குழல் ஊதத்தான் ஊதுவேன்... உனக்கென்ன?''

''ஹூம் ஊது பார்ப்போம்!''

''ஊதினால் என்ன செய்வாய்...?''

''என்ன செய்வேனா... இதோ செய்கிறேன் பார்'' என்று கட்டாரியை உயர்த்தியவாறு அவனை நோக்கிப் பாய்ந்தான் மூத்தவன்.

''ஐயோ! மகனே...'' என்று தன் இளைய புதல்வனை ஓடி அணைத்துக் கொள்கிறாள் உணவு சேகரித்து வந்த அன்னை. அவள் கையிலிருந்த கனிவகைகள் பூமியில் சிதறிக்கிடந்தன.

''பாவி... உனக்கேன் இந்தக் கொலைவெறி?'' என்று நெஞ்சு பதறி கண்ணீர்க் வடிக்கிறாள் அன்னை. அவள் வெள்ளைத் துகில் கண்ணீரில் நனைகிறது.

''உம்... உனக்கு அவன்மேல் தான் ஆசை! அவன் புல்லாங்குழல் ஊதி, பாம்பை வரவழைத்து என்மேல் கடிக்க விட இருக்கிறான். அதைக் கேட்கமாட்டாய்!'' என்று சீறுகிறான் மூத்தவன்.

''சீ... வீண் குரோதம் வளர்க்காதே!... தம்பி நல்லவன்... அதை உணர்ந்து நட; வீணாய் வெறிபிடித்து ஏன் அலைகிறாய்? உங்களிடையே ஒற்றுமை நிலவினால் தான் என் இதயத்தில் சாந்தி நிலவும். என் இதய சாந்தி தான் உங்கள் மூச்சு. உன் கையில் எதற்கு அந்தக் கட்டாரி? பாபம் பிடித்த அக்கட்டாரியைத் தூக்கி ஏறி! அது இருக்கும் வரை யாரைக் கொல்லலாம் என்று தான் உன்மனம் வெறிபிடித்து அலையும்! அதைத்தூக்கி எறிந்து விட்டு உன் தம்பியிடம் அன்பு செய்து வாழடா!'' என்று உளம் நெகிழக் கூறுகிறாள்.

''ஓ ஹோ... உங்கள் சூழ்ச்சியெல்லாம் எனக்குத் தெரியும். நீங்கள் இருவரும் சேர்ந்து என்னைக் கொன்று விடுவீர்கள்! தற்காப்புக்காக வைத்திருக்கும் என் கட்டாரியை எறிந்து விடச் சொல்லி, என்னைக் கொன்று விடச் சதி செய்கிறீர்கள்! அதுதானே என்னிடம் நடக் காது.''

''முட்டாள்... உன் கொடுமைகளைச் சகித்துக்கொண்டிருப்பது உன் கையிலிருக்கும் கட்டாரியினால் அல்ல! நீயும் என் மகன் என்ற பாசத்தினாலும் அல்ல. குற்றங்களுக்குரிய தண்டனை பெறும் காலம் உனக்கு இன்னும் வரவில்லை. இயற்கையின் நியதி— சட்டம்— அது உன்னை நிர்ப்பந்தப் படுத்தும் காலம் வரும். அப்பொழுது அதன் முன் நீ பதில் சொல்ல வேண்டும் மகனே! அந்தச் சட்டத்தை மீறும் எவரும் அதன் கோர தண்டனையிலிருந்து தப்ப முடியாது.''

''சூ... சும்மா பூச்சி காட்டாதே அம்மா! அதெல்லாம் யாருகிட்டே'' என்று கேலி பேசியவாறு கீழே சிதறிக் கிடந்த பழங்களை யெல்லாம் புசிக்கவாரம்பித்தான்.

சூரியன் இப்பொழுது உச்சிக்கு வந்து விட்டான். அன்னை சேகரித்து வந்த உணவு அனைத்தையும் புசித்து விட்டு மரநிழலில் படுத்துறங்குகிறான் மூத்தவன்.

அன்னைக்குத் தன் மகனின் போக்கு மனதைக் குடைந்தது. பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள். அவள் எண்ணமெல்லாம் மரப்பொந்தில் மறைத்து வைத்திருந்த மைந்தனின் கட்டாரியில் பதிந்தது. அவள் நினைவு மரப் பொந்தில் கருநாகம் போல் குடிக் கொண்டது.

இளையவன் காய் கனிகளைப் பறித்து வந்து தாய்க்குக் கொடுத்துத் தானும் புதித்தான். தன் அன்பு மைந்தனை மார்போடு அணைத்து நெஞ்சுவிம்மினாள்... மூத்தவனை எண்ணி, கண்ணீர் வடித்தாள்.

மரநிழலில் படுத்துறங்கிய மூத்தவன் கண்விழித்தான். அவனுடைய வல்லூறு பசியுடன் பக்கத்திலிருந்தது.

மூத்தவன் பார்வை இளையவனருகே இரைபொறுக்கிக் கொண்டிருந்த புறாவின்மீது விழுந்தது... அந்தப் புறாவைக் கொன்று தன் கழுகுக்கு உணவாக்கினால்

என்ன... என்று அவன் நினைத்தபொழுது, அவன் உள்ளம் அந்த வெண்புறாவின் செங்குருதியில் மூழ்கித் திளைக்க வெறிகொண்டது.

இளையவனின் முன்னே சென்று துள்ளி நின்றான்...

''உன் புறா எனக்கு வேண்டும்...''

''அம்மாடி... நான் மாட்டேன்... நீ அதைக் கொன்று விடுவாய்...

''ஹூம்... புறாவைக் கொன்றால் உனக்கென்னடா... என் வல்லூறுக்கு அதிகப்பசி... கொடுக்கிறாயா... இல்லையா?'' என்று சீறினான்.

''முடியாது...''

''ஹூம்... முடியாதா... இதோ''... ஆனந்தமாக இரை பொருக்கிக் கொண்டிருந்த அந்த வெண்புறாவை அவன் முரட்டுக்கரத்தால் நெறித்துப் பிடித்தான்... அதன் சிறகுகள் 'படபட'த்தன... அதன் அழகிய செந்நிற விழிகளில் மரணத்தின் பயங்கர சாயை படிந்தது... அதன் ஹிருதயத் துடிப்பு, கொஞ்சம் கொஞ்சமாகத் தளர வாரம்பித்தது.

கழுகின் கண்களில் பிணப்பசி! நிண நாற்றத்தை மோப்பம் பிடிக்கத் தயாராகும் நாசி; புறாவின் வயிற்றைக் கொத்திக் கிழிக்க தீராத வெறி... அந்த ரத்தத்தில் விடாய் தீர வேட்கை.

இளையவனின் பொறுமை எல்லை கடந்தது. மூத்தவனின் மீது பாய்ந்து அவன் பிடரியில் குத்தினான்... பதிலுக்கு இளையவனின் மோவாயில் ஒரு பலமான குத்து விழுந்தது... வாயில் ரத்தம் வழிய மலர்ந்து விழுந்தான் சிறியவன்.

இளையோனின் கரங்கள் முறுக்கேறின... மீண்டும் மூத்தவன் மீது பாய்ந்து தாக்கினான்...

மூத்தவன் மாமரத்தடிக்கு ஓடினான்... கட்டாரியை எடுக்க மரப்பொந்தினுள் கையை விட்டுத் துழாவினான்.

'அம்மா...'' வென்ற அலறல்... அவன் கையிலிருந்த வெண்புறா சிறகடித்துப் பறந்தது...

மூத்தவன் கீழே விழுந்து புரண்டு துடித்தான். மரப் பொந்திலிருந்து வெளிவந்த கருநாகம் படமெடுத்துச் சீறி நின்று ஆடியது. மறுகணம் அந்தக் கழுகு அதன் மீது பாய்ந்தது.

அந்தக் கிழட்டுக் கழுகைக் கடித்துக்குதறிச் சின்னா பின்னாமாக்கிவிட்டு எங்கோ ஓடி மறைந்தது கருநாகம்!

அன்னை எழுந்து வந்து இக்காட்சியைக் கண்டாள்.

அவள் முகத்தில் ஒரு சோகப் புன்னகை. ''எனக்குத் தெரியும் அவன் முடிவு இதுதான்! இளையோனின் கண்கள் கலங்கின. ''மகனே! இயற்கையின் சட்டத்தை நமக்குச் சாதகமாக மாற்றுவதில் தவறில்லை; அது இயற்கை அன்னையை எழிற்படுத்துவதாகும். ஆனால் மனித குலத்தை அழிக்க, நாசம் புரிய விரும்பினால் அது தற் கொலை! இயற்கை அன்னை அதைச் சகிக்கமாட்டாள். ஜீவனெனும் பால்சுரந்த அவள் ஸ்தனங்களை அறுக்க முயன்றால், அவள் நெஞ்சத்துடிப்பின் அதிர்ச்சியிலே, அந்த வெம்மையிலே பொடி சூரணமாகி விடுவீர்கள்...

''மகனே! அந்தப் பணியிலே, பாலூட்டிய ஸ்தனங் களை அறுத்து மாமிசம் சுவைக்கும் வெறிச்செயலில் ஈடு பட்டான் உன் தமையன். அதன் விளைவு அவன் முடிவு! இனிமேல் எனது லட்சியம் உன்னால் கைகூடும்'' என்று கூறி, தன் அன்பு மகனை வாரி உச்சிமோந்து முத்தமிடு கிறாள். அவள் கழுத்தைக் கட்டிக்கொண்டு அவளுடைய ஆனந்த வெள்ளத்தில் மெய் மறந்தான் இளையவன்.

கதிரவன் மலைவாயிலில் இறங்குகிறான். பறவைகள் ஆனந்தமாக, வல்லூறுகளின் அச்சுறுத்தலின்றி வான

வீதியில் பறந்து செல்கின்றன. வானில் தாரகைகள் கண் சிமிட்டுகின்றன. கடலும்கூட, அமைதியாக இருந்து, பிறகு சந்தோஷ ஆரவாரம் செய்கிறது.

ஆழியின் அலைகள் திரைத்து நெரித்து ஆனந்தப் பள்ளுப் பாடுகின்றன. அமைதியின் பூரணப்பொலிவுடன் கீழ்வானத்தில் வெண்மதி செந்நிறத்துடன் வட்டமாகத் திகழ்கிறது... எங்கும் பேரமைதி; சாகரத்தின் சாந்தி கீதம்!

கடற்கரையில், மணல் மேட்டில் லோகமாதாவும் அவள் மைந்தனும் அமர்ந்திருக்கின்றனர்

''தாயே அந்த நிலவின் நடுவில் அந்தக் கலவையின் சாயல், கருநிறக் களங்கம் இல்லாமலிருந்தால்...''

''உன் எண்ணம் இயற்கைக்கு மாறானது...

''மகனே நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் சாந்தி நிலவ. நம்முடைய ரத்தம் பூமியில் பாய்ந்தோடத் தானே செய்கிறது... அது இறுதி சத்தியம்! நமது சக்தி யனைத்தையும் திரட்டி, ரத்தம் சிந்தி, போர் புரிந்து அந்தப் பேய்த்தகையை அழித்த பின்புதான் பரிபூர்ண சாந்தி நிலவும்.

''அந்தக் கறைதான் நாம் சாந்திக்காக — சமாதானத் துக்காகப் போராடியதைப் பிரபஞ்சமுள்ளளவும் நமக்கு உணர்த்திக் கொண்டேயிருக்கும்...''

''இந்த அகில உலகமும் உனக்காக நான் படைத்ததுதானே! குளிர்ச்சிமிக்க இந்தச் சந்திரனைப் படைக்க உன் தந்தையோடு நான் எவ்வளவு போராடி னேன்... எவ்வளவு ரத்தம் சிந்தினேன்... அந்த ரத்தக் கறைதான் அது! அதைச் சிருஷ்டிக்க நான் பட்ட சிரமங் களை அந்தக்கறை நினைவூட்டுகிறது அல்லவா?... அத் தத்துவங்கள் உனக்குப் புரியாது...

''லோக புதல்வா... நாம் இனிமேல் நிச்சலமாக வாழலாம்.

'வாழ்க சாந்தி' என்று கடலன்னை கீதமிசைப்பதைக் கேளடா...'

''வையம் சிறக்க, வாழ்வாங்கு வாழ, தென்றல் நிம்மதியாக உலா வரும் கோலத்தைப் பார் மகனே! பார்... கண் குளிரப் பார்... இந்த அகிலமெல்லாம் உன்னுடையது... அமைதி பொலிய அண்டங்களில் மீதெல்லாம் ஆட்சி செலுத்தி அன்பு செய்து வாழ்வாயாக!'' என்று ஆசி கூறுகின்றாள்.

அந்த மைந்தன் அவள் முன் வணங்கி நின்றான்... கடல் ஆரவாரிக்க நிலவு ஒளி மழை பெய்கிறது.

அவள், கால அன்னை! சமாதான தேவதை! லோக மாதா...

அவளே ஊழிக்கால உருத்திரதேவி!

அவன், வளரும் சக்தி! அகிலத்தின் உயிர்நாடி...

பாட்டாளி! சாந்தி சாகரத்தின், சாந்தி பூமியின்,

ஏகச்சக்ராதிபதி!

# சுமை பேதம்

**...''மனுசன், மாட்டையும் குதிரையையும் காட்டியும் மட்டமாவா பூட்டான்?... மாடு வலிக்கற தெங்காட்டியும், குதிரை வலிக்கற வண்டி ஒஸத் தின்னா, மனுசன் இஸ்க்கற வண்டி எல்லாத்தியுங் காட்டியும் ஒஸத்தி இல்லியா சாமி?''**

---

ரிக்ஷாக்கார மருதையாவுக்குப் பூர்வீகம் தென்னாற் காடு ஜில்லாவைச் சேர்ந்த விக்கிரவாண்டி.

கல்யாணம் கட்டிக் கொண்ட இரண்டு வருஷத்திற் கெல்லாம் பெண்சாதியோடு ஏற்பட்ட சிறு சச்சரவைச் சாக்காக வைத்துக் கொண்டு ஏற்கெனவே தன் உள்ளத் தைக் கவர்ந்திருந்த ''கௌரவ லட்சியமான மிலிட்டரி யில்'' சேர்ந்து இரண்டு வருஷத்திற்குப் பின் கையில் இரண்டு நூறு ரூபாய் ரொக்கத்துடன் விக்கிரவாண்டிக்கே திரும்பி வந்து பழைய மருதையாவாகவே காலம் கழித்து வந்தான்.

என்னதான் இருந்தாலும் அந்த வானம் பார்த்த பூமியில் அவனால் வாழ்க்கை நடத்த முடியவில்லை. கடைசியில் கையிலிருந்த சில பத்து ரூபாய்களை வைத்துக் கொண்டு — என்ன 'பிசினஸ்' நடத்திப் பிழைத்து விடலா மென்று நினைத்தானோ? — தன் சுகதர்மிணி சகிதமாக ஒரு நாள் சென்னை வந்து சேர்ந்தான்.

என்னென்னவோ முயற்சிகள்... எல்லாவற்றிலும் அவனைப் போன்றவர்களின் போட்டியும் கூட இருந்தது. முயற்சிகள் யாவும் வியர்த்தமாயின. பின்புதான், தன்னை

யொத்த மனிதர்களுடன் போட்டியிடுவதைவிட, யந்திரங்களுடனும், கால்நடைகளுடனும் போட்டியிடுவது எவ்வளவோ மேல் என்று நினைத்து முடிவில் ஒரு நாள் கம்பீரத்துடன் 'ரிக்ஷா' வண்டியின் ஏர்க்காலைப் பற்றிக் கொண்டு தார்ரோட்டில் வியர்வைத் துளிகள் சிந்தித் தெறிக்க ஓடி ஓடி உழைத்தான்; சம்பாதித்தான்...

எழும்பூர் ரயில்வே ஸ்டேஷன் அருகே மேம்பாலத்தின் இறக்கத்தில் 'தூங்கு மூஞ்சி' மரத்தடியில் அவன் குடும்பம் நடத்தினான்... அவனைப் போன்று அவன் சகாக்கள் பலரும் அப்படித்தான் அங்கு வாழ்ந்தனர்.

அவன் மனைவி பூங்காவனத்துக்கு மட்டும் சிற்சில சமயங்களில் தன் ஊரில் தான் வாழ்ந்த வாழ்க்கையும், இப்படி மரத்தடியில் காய்ச்சிக் குடிக்க வேண்டிய காலம் வந்ததையும் நினைக்கும் போது மனம் நையத்தான் செய்யும்... என்றாலும் மருதைய்யாவின் சிரிப்பும் பாட்டும், கிண்டலும் கேலியும் அவற்றையெல்லாம் தட்டியெறிந்து மறக்கடித்து விடும்.

அன்று ஊரிலிருந்து பூங்காவனத்தின் தம்பி செல்லப்பன் வந்திருந்தான். தன் மாமன் பட்டணத்தில் என்னவோ பெரிதாக வேலை பார்ப்பது போலவும் தனக்கும் 'ஏதாவது வேலை கெடைச்சி ஒழுங்கா பொழச்சிக்கலாம்' என்றும் எண்ணமிட்டு வந்த செல்லப்பனுக்கு "அக்காவும் மாமனும் மரத்தடியில் பொங்கித் திங்கறதும், மாமன் மாடுமாதிரி மனுசனை வண்டியிலேத்தி இழுத்துக்கினு போறதும்" பெருத்த ஏமாற்றமாகவும், அவமானமாகவும் இருந்தது.

'ஏ, மாமா... போயும் போயும் பட்டணத்துக்கு ரிக்ஷா வலிக்கவா வந்தே?...'' அவன் கேள்வியில் கிண்டலும் வருத்தமும் கலந்திருந்தன.

"வேறே என்னடா பண்றது? இதைவிட நல்ல வேலென்னு வேறே ஒண்ணும் எனக்குத் தோணலே...

எனக்கே இன்னிக்கு இஸ்டம்னா வண்டியெ வலிச்சிக்கினு ரெண்டு சவாரி அடிப்பேன்! அப்போ மாமனுக்குக் கறியுஞ் சோறுந்தான்... ஒரு நாளைக்கு அலுப்பா இருந்துதுனா எப்பேர்ப்பட்ட ராஜா வந்து சவாரி கேட்டாலும், போடா ஜாட்டான்னு வண்டியிலேயே படுத்துக் கெடப் பேன்... நம்ம இஷ்டப்படி நம்ம வேலெ... வேறே என்னடா வேணும்...''

''அது என்னவோ மாமா... நம்ம ஊர்க்காரங்க யாராவது பார்த்தாங்கன்னா...''

''அட... இவன் யார்ரா... ஊர்க்காரன் ஊர்லே... இங்கே என்னா திருடர்மா, கொள்ளை அடிக்கறமா... கஷ்டப்பட்டு ஓழச்சா கூலி... இதிலே என்னா மச்சான் அவுமானம்?...''

''எனக்கு என்னவோ பிடிக்கலை மாமா''...

''போடா... இவுரு கலெக்டரு பேரன்... கவுனரு உத்தி யோகந்தான் பாப்பாரு. நம்மாலே ஆவாதுடா சாமீ...''

''சரி... சோத்தெத் துன்னுப்புட்டுப் பேசுங்க''... என்று அழைப்பு விடுத்தாள் பூங்காவனம்.

அலுமினியம் தட்டிலிருந்த பழைய சோத்தைப் சாப் பிட்டுக் கொண்டே சொன்னான் மருதை:

''தோ... பாருடா மச்சான்... இந்தக் காலத்திலே எந்த வேலையும் செஞ்சுப் பொழைக்கலாம்... அதுலே என்னா கேவலம்!) வேணும்னா சொல்லு; நம்ம நாயுடு வூட்லே இன்னும் ரெண்டு வண்டி புதுசா வருது... ஒனக்கும் ஒண்ணு வாடகைக்குப் புடிச்சி தர்றேன்.

''சே... சே... நா மாட்டேன்; வந்த வழியெப் பார்த் துக்கினு ஊருக்குப் போறேன்.''

''ஐய, அவனெப் புடிச்சிக்கிட்டு நீயேன் வம்பு குடுக் கிறே... என்னமோ வந்தான்... ரெண்டு நாளுக்கு இருந்

துட்டுப் போறான்'' என்று தன் தம்பிக்குப் பரிந்து பேசினாள் பூங்காவனம்.

ஃ ஃ ஃ

''டேய்... மச்சான், எங்கூட வர்ரியா பட்டணமெல்லாம் சுத்திக் காட்றேன், உம்... நீதான் ராத்திரிக்கு ஊருக்குப் போறியே; சரி... ஏறு வண்டியிலே அந்தப் பக்கம்தான் போறேன்...''

'சீ... என்னெ ஒக்காரவெச்சி மாமன் இழுக்கிறதா?'' என்று நினைத்துச் செல்லப்பன் தயங்கினான்.

''வேணாம்... நா' நடந்தே வர்ரேன்...',

''டே... ஏர்ரா... எந்தெந்தப் பசங்களெயெல்லாம் நா ஏத்திக்கினுப் போறேன்... ஒன்னெ ஏத்திக்கினா என்னரடா? உம்... சும்மா ஏறி உக்காரு...''

வண்டியில் ஏறி உட்காரும்பொழுது செல்லப்பனுக்கு உடல் குன்றி உள்ளமெல்லாம் கூசியது

'லைட் ஹவுஸ்' பார்க்க செல்லப்பனை விட்டுவிட்டு அதற்குள் எங்கோ ஒரு சவாரிபோய் விட்டு மீண்டும் ஹைகோர்ட் அருகே மரத்தடியில் வந்து நின்றான் மருதையன்.

உள்ளே சென்ற செல்லப்பன் இன்னும் வெளியே வரவில்லை.

மருதையனுக்கு அருகே யாரோ ஒரு மனிதர் பேப்பர் படித்துக் கொண்டு நின்றிருந்தார்... உள்ளிருந்து வருவோரையும் பேப்பரையும் மாறி மாறி அவர் பார்ப்பதிலிருந்து அவரும் யாருக்காகவோ காத்திருக்கிறார் என்று தெரிந்துக் கொண்டான் மருதை.

''என்னா சார்... யாருக்கோசரமாவது காத்துக்கினு இருக்கிறியா...'' என்று பேச்சுக் கொடுத்தான்.

''ஆமா... பொண்டுவ போயிருக்காங்க இன்னங் காணமே'' என்று சொல்லிக்கொண்டே மீண்டும் பேப் பரில் பார்வையை ஓட்டினார் அந்த ஆசாமி.

''என்னா சார் பேப்பர்லே விசேஷம்?... சண்டெ வருமா...?''

''உம்... நம்ம இந்தியாவுலே வராது...''

''மந்திரிங்க எதனாச்சும் பேசி இருக்காங்களா சார்...''

''ஓ... பேசி இருக்காங்க. இந்த ரிக்ஷா வண்டியெல் லாம் எடுத்துப்புடணுமின்னு கூடப் பேசி இருக்காங்க...''

''என்னா சாமி...? என்னா...''

''மனிதனை மனிதன் சுமந்து செல்லும் ரிக்ஷா வண்டிகள் மிகவும் அநாகரீகமானவைகள் தான்னு ஒரு மந்திரி பேசி இருக்கார்'' என்று பேப்பரில் இருந்த வாசகத் தைப் படித்துக் காட்டினார் அவர்.

''அது என்னா சாமி எப்பப் பார்த்தாலும் இப்படிப் பேசிக்கினே இருக்காங்க?... நானும் ரொம்ப தடவை கேட்டுப்புட்டேன். இல்லே... நான்தான் கேக்கறேன்... மாட்டு வண்டி ஒஸத்தியா... குதிரை வண்டி ஒஸத்தியா? சொல்லு சாமீ...''

''குதிரை வண்டிதான்...''

''அப்படின்னா மனுசன் மாட்டையும் குதிரையையும் காட்டியும் மட்டமாவா பூட்டான்? மாடு வலிக்கிறதெங் காட்டியும் குதிரை வண்டி ஒஸத்தின்னா. மனுஷன் இஸ்கற வண்டி எல்லாத்தியங் காட்டியும் ஒஸத்தி இல்லியா சாமீ...'' அந்த மனிதருக்குப் பதில் சொல்ல முடியவில்லை... சிரித்தார்:

ஸ்டேஷனுக்குள்ளிருந்து செல்லப்பனும் வந்து விட்டான்.

செல்லப்பனை ஏற்றிக்கொண்டு அவன் புறப்பட்ட நேரத்தில்.

''ஏ! ரிக்ஷா'' என்ற குரல் கேட்டுத் திரும்பினான்.

''ராயபுரத்துக்கு வர்ரியா.''

''இல்லே, எம்மச்சானெ ரெயிலுக்கு ஏத்திக்கினு போறேன்'' என்று சிரித்தான் மருதை!

வண்டி எர்ரபாலு செட்டித் தெருவில் வந்து கொண்டிருந்தது. பெரிய பெரிய பேல்களையும் மூட்டைகளையும் ஏற்றிய கட்டை வண்டிகளை மூன்று நான்கு பேராய் வியர்வை, கசிந்து கசிந்து உடலெல்லாம் வழிய,

''ஏறு...ஹம்... தள்ளு... அடி...அடி...'' என்று பெருஞ் சப்தமிட்டுக் கொண்டு தள்ளி வருவதையும் செல்லப்பன் கண்டான். ''டே... மச்சான்... இது தேவலாமாடா?'' என்றான் மருதை.

''பின்னே என்ன மாமா? இது எவ்வளவோ தேவலாமே...'' என்றான் செல்லப்பன்.

மருதை சிரித்தான்.

''டேய்... எல்லாச் சொமையும் ஒன்னுதானே.''

''அதில்லே மாமா. என்னா இருந்தாலும் ஒரு மனுசனை வெச்சி இன்னொரு மனுஷன் வலிச்சிக்கினு போறதுன்னா கேவலந்தான்.''

''டேய் மச்சான், நம்ம வண்டியிலே எதெ வெச்சி இஸ்த்தாலும் பாரம் பாரந்தான்; அதிலே எதுக்கு இது மனுஷன் பாரம் இது மூட்டெ பாரம்னு நெனைச்சிக் கணும்? என்னமோ ஒரு மூட்டென்னு நெனைச்சிக்கறது. அவங்களெ மனுஷனா மதிச்சாத்தானே நமக்குக்

கேவலம்? நம்பளை மனுசன்னு மதிக்காமெ நம்ம முதுவு மேலே ஒக்காந்திக்கிறவங்களை நாம்ப ஏன் மனுசன்னு நெனைக்கணும்?''...

ஒருகணம் செல்லப்பன் யோசித்தான். வண்டி 'பிராட்வே'யில் வந்து கொண்டிருந்தது.

''மாமா ரிக்ஷாவெ நிறுத்து'' என்றான். மருதைய்யா ஒன்றும் புரியாமல் வண்டியை நிறுத்தவே, கீழே குதித்த செல்லப்பன் 'நா' நடந்து வர்ரேன் மாமா'' என்றான்.

''என்னடா மச்சான் திடீர்னு?''

''அதுவா மாமா, நா மனுசன் அதனாலே'' என்று 'பளிச்'செனக் கூறினான் செல்லப்பன்.

மருதையா சப்தம் போட்டுச் சிரித்தான்.

ஃ ஃ ஃ

மறுநாளிலிருந்து செல்லப்பனும், தன் மாமனைப் போலவே 'ரிக்ஷா வலிக்க' ஆரம்பித்துவிட்டான்!

தார்ரோட்டில் வியர்வைத் துளிகள் சிந்தித்தெறிக்க ஓடி ஓடி உழைத்தான். ஆமாம்; அவன் அகராதிப்படி ரிக்ஷாவை இழுத்தால் மனிதன்'தான்... ரிக்ஷாவில் சவாரி செய்பவர்களைப் பற்றி அவனுக்குக் கவலையில்லை.

# கண்ணன் பிறந்தான்

**......உபன்யாசகர் உபவாசகராக இருப்பதைப் பற்றி யாருக்குக் கவலை? அவர் வாக்குவளத்தில் மெய் மறந்தவர்கள் அவர் வாழ்க்கை வளத்தைப் பார்க்கவில்லை.**

---

"சடகோபன்... ஆறாம் வகுப்பு, ஜில்லா போர்ட் பாடசாலை என்று தலைவர் அழைத்ததும் கூட்டத்தில் சில வினாடிகள் 'சலசல'ப்பு.

"பாடு... அம்பி..." என்று தலைவர் சிறுவன் முதுகில் தட்டிக் கொடுக்கிறார். 'கணீ'ரென்று சிறுவனின் குரல் ஒலிக்கிறது.

"புள்ளும் சிலம்பினகாண்...
புள்ளரையன் கோயிலில்...
வெள்ளை விளிசங்கின்...
பேரரவம் கேட்டிலையோ"

அண்ணாசாமியென்ற ஓர் உருவம் திகைக்கிறது! கண்ணீர் வடிக்கிறது. 'கண்ணா கண்ணா' வென்று இதயம் ஓலமிட்டு விம்மி விம்மி அழுகிறது. ஐயோ!... 'அதே அடிகளை'ப் பையன் பாடுகிறான்; பக்தர் குழாம் ரசிக்கிறது!

மார்கழி மாதம் கடைசி நாளில் வழக்கம்போல் ராமாபுரம் பெருமாள் கோயிலில் திருப்பாவை விழா. சிறுவர்களின் பாடல் போட்டி நிகழ்ச்சி ஆரம்பமாகி விட்டது. ஜனத்திரள் நெரிகிறது. ஜில்லா போர்ட் ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் அனந்தசயனம் தலைமை வகிக்

கிறார். அவர் அருகே பாகவதர் அண்ணாசாமி சோகமே உருவாக அமர்ந்திருக்கிறார்.

கடந்த ஓராண்டு காலமாக பாகவதர் அண்ணாசாமி, பெருமாள் கோயில் பக்கம் திரும்பியதுகூட இல்லையென்றால் அவ்வூர்வாசிகள் நம்ப மாட்டார்கள்... என்றாலும் அதுதான் உண்மை! அவர் நெற்றி இப்பொழுதும் வெறிச்சென்றுதானே இருக்கிறது? நாராயணாவென்னும் நாமத்தை உச்சரித்து ஆண்டு ஒன்றாகி விட்டது! 'நான் மறவேன் நாராயணா வென்னும் நாமம்' என்று சொன்னதெல்லாம் பொய்த்துவிட்டது! நாராயணனை மறப்பது இருக்கட்டும்; தன்னையே மறந்து சிலையாகி விட்டிருந்தார் அண்ணாசாமி! சிறுவனின் பாடலில் அவர் மனம் பதியவில்லை... எங்கோ ஓடுகிறது. யாரையோ தேடுகிறது!

ஃ ஃ ஃ

போன வருஷம்...

மார்கழி மாதம்; வைகறை நேரம்!... பனி மூட்டம் பார்வையை மறைக்கிறது. காவேரியாற்றங் கரையில் வரிசை வரிசையாக ஆண்களும் பெண்களும் போகிறார்கள்; வருகிறார்கள். வெள்ளி முலாமேறிய கீழ் வானத்தில், கதிரவனின் ஒளிக் கதிர்களை நோக்கிப் பறவையினங்கள் கூட்டம் கூட்டமாகப் பறக்கின்றன!

கிராமத்து அக்ரகாரத்தின் மேலண்டை புரத்தில் பெருமாள் கோயிலை அடுத்த அழகிய தென்னஞ்சோலை! தெருக்கோடியில் ஒரு பழைய ஓட்டு வீடு! அந்த வீட்டின் பின்புறம்— தோட்டத்தில் இரு உருவங்கள் பனிநீரில் நனைந்த மலர்களைக் கொய்த வண்ணம் கம்பீரமும், குழைவும் கலந்த குரலில் பாடுகின்றன. பாகவதர் அண்ணாசாமியும் அவர் மகன் கண்ணனும்தான்!

''ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி...
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரிபெய்து...
... சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்...''

பாடலை நா உச்சரிக்க கரங்கள் மலர் கொய்வதில் மும்முரமாக ஈடுபட்டிருக்கின்றன. பூக்கொய்தாகிவிட்டது.

''கண்ணா...''

''என்னப்பா...''

''இன்னிக்கு திருப்பாவை போட்டியிலே பேர் குடுத்திருக்கிறாயோ?''

''ஓ...''

மலர் நிறைந்த பூக்குடலையைத் தோளில் தொங்க விட்டுக் கொண்டு 'ஆழி மழைக்கண்ணா...' என்று மீண்டும் குரல்கள் இனிமையோடு இழைய இருவரும் வீட்டிற்குள் நுழைகின்றனர்.

''வென்று பகை கெடுக்கும்
நின்கையில் வேல்போற்றி
என்றென்று உன்கையில்
ஏந்திப்பறை கொள்வான்
இன்று யாம் வந்தோம்
இரங்கேலோ ரெம்பாவாய்''

என்ற பெண்ணின் குரல் வீட்டகத்தே இருந்து மதுரமாக ஒலித்தது.

''அப்பா பூப்பறிச்சுட்டேளா நாழியாச்சு சீக்கரம் கொண்டு வாங்கோ தொடுத்துடறேன்...'' என்று

சொல்லிக்கொண்டே சிறுவனிடம் இருந்த பூக்குடலையை வாங்கினாள் பதினாறு வயதுடைய அவர் செல்வமகள் ஆண்டாள்.

அந்த மூவரையும் கொண்டது அவ்வேழைக் குடும்பம்.

தொடுக்கப்பட்ட மலர் மாலையைக் குடலையில் போட்டுக்கொண்டே 'ஆச்சு போகலாமா கண்ணா' என்றவாறு தன் தம்பியைக் கனிவோடு நோக்கினாள். சிறுவனின் முகம் வாடியிருந்தது! தலை நிமிர்ந்து அவளைப் பார்த்தான்... கண்களில் நீர் சுரந்தது. தலை குனிந்தான். அவன் கண்ணீர் தரையில் சிந்தித் தெறித்தது!

''கண்ணா... கண்ணா ஏன்டா அழறே' என்று ஆதுரத்துடன் அவனை அணைத்துக் கொண்டாள்.

''பசிக்கிறது... அக்கா'' என்று சிறுவனின் தொண்டை கரகரத்தது.

தோட்டத்து வாசலில் நின்றிருந்த பாகவதர் அண்ணாசாமி பின்புறமாகத் திரும்பி அடுக்களையில், இரண்டு நாட்களாக ஈரம் படாமல் கவிழ்த்து வைக்கப் பட்டிருக்கும் சோற்றுப் பானையைப் பார்த்தார்.

''வாடா கோயில்லே பிரசாதம் கொடுப்பா'' என்று அவன் கண்ணீரைத் துடைத்து அழைத்துச் சென்றாள் ஆண்டாள்.

''பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு'' என்று இதயபூர்வமாக ஜெபித்துக் கொண்டு கோவிலுக்குச் சென்றனர் மூவரும்.

ஆகா!... அந்தப் பாடல்களில் தான் எத்தனை இன்பம்! அந்த இன்பத்தில்தான் அவர்கள் வாழ்கின்றனர். அந்த இன்பம் மட்டும் போதுமா?

அண்ணாசாமி ஐயங்கார், மன்னார்குடி தாலுக்காவில் மிகவும் பிரபல்யமானவர். அவரது காலக்ஷேபங்களும் உபன்யாசமும் அனைவருக்கும் தெரியும். அவர் எப்படி 'காலக்ஷேபம்' செய்கிறார் என்பது யாருக்கும் தெரியாது. உபன்யாசகர் உபவாசகராக இருப்பதைப் பற்றி அவர்களுக்கென்ன கவலை? அவர் வாக்கு வளத்தில் மெய் சிலித்தவர்கள் அவர் வாழ்க்கை வளத்தைப் பார்த்து மனம் நோகவில்லை!

அவர் ஆண்டவனின் தொண்டர்! யார் கையையும் எதிர் பர்ர்த்தாரோ, இல்லையோ, 'ரெண்டுநாளா பட்டினி' என்று ஒருவரிடமும் சொல்லாமல் நாராயணா வென்னும் நாமத்தை ஜெபித்துக் கொண்டு, திவ்யப் பிரபந்த போதையில் ஆழ்ந்திருந்தார். தன் பிள்ளைக்கும் பெண்ணுக்கும் காற்றையும் நீரையும், எப்பொழுதோ சில நாட்களில் கொஞ்சம் உணவையும் உண்டு உயிர்வாழக் கற்றுக் கொடுத்திருந்தார். அவர் வீட்டில் இரண்டு நாட்களுக்கொரு முறை அடுப்பு எரிவதே நாராயணன் அருள் என்று அவர் நம்பினார்; அந்த அருளில் அகமகிழ்ந்தார்.

அவர் மனைவி அலமேலு இரண்டு வருஷங்களுக்கு முன் தான் இறந்தாள். வறுமை இருள் சூழ்ந்த ஜீவிதம் அவளை உதறி எறிந்தது! தன் கணவன் 'பற்றற்ற ஞானி' என்பதை அறிந்தும் அந்தக் குழந்தைகளை அவரின் ஏக பராமரிப்பில் விடுத்து, தான் மட்டும் நிம்மதியாக நாராயணனின் பாதார விந்தங்களில் அடைக்கலம் புகுந்தது, தான் பெற்ற செல்வங்களுக்கு அவளிழைத்த துரோகம் தான்!

அவருக்கு யாரும் என்றும் சுமையாக இருந்ததில்லை. 'அவன் பிறப்பித்தான், ரக்ஷிப்பது அவன் கடன்' என்ற இட்சித்தத்தில் கலக்கமின்றி வாழ்ந்தார்.

பிள்ளையையும் பெண்ணையும் தம் பக்தி வழியில் நடை பயில, பக்குவப்படுத்தி இருந்தார்.

'அக்கா சாதம் சாப்பிடணும்' என்று கண்களில் நீர் ததும்ப கையிலிருந்த சுண்டலைப் பார்த்துக்கொண்டே கூறினான் கண்ணன்.

''சாயங்காலம் அரிசி வாங்கி சமைக்கலாம்... இப்போ இதை சாப்பிடுடா'' என்று தன் கையிலிருந்த பிரசாதத்தையும் அவனிடம் கொடுத்தாள் ஆண்டாள்.

'அக்கா நோக்குப் பசிக்குமே'

''இல்லேடா; நான் வாழைப்பழம் சாப்பிட்டேனே'' என்று புளுகினாள். அவள் கண்கள் கலங்கின,

''அக்கா நாம 'சாமிசாமி'ன்னு பாடிண்டிருக்கோமே, சாமி ஏன் நம்மைப் பட்டினி போடறார்?...'' அவன் கேள்வியில் என்ன ரௌத்திரம்!

''பக்தாளை சுவாமி அப்படித்தான் சோதிப்பார்...''

''நம்ம பக்தியை சுவாமிகூட சோதிச்சுத்தான் தெரிஞ்சுக்கணுமா?...

''தம்பீ...''

''பின்ன என்னடீ... நான் எவ்வளவு பூப்பறிச்சு ஜெபம் பண்றேன்... இந்தப் பாழாப் போன சாமிக்கு...''

''தம்பீ...'' என்றவாறு அவன் கன்னத்தில், பளீரென அறைகிறாள்...

வாயில் சுண்டலும் பிரசாதமும் அடைக்க விக்கி விக்கி அழுகிறான் கண்ணன்...

''தம்பீ!... அபச்சாரமா பேசலாமோடா, தெரியாமெ அடிச்சுட்டேன். மன்னிச்சிக்கோடா அழாதேடா, கண்ணா அழாதேடா. என்னெ வேணுமானா திருப்பி அடிச்சுடு, அழாதேடா கண்ணா,'' என்று அவனை அணைத்துக் கொண்டு ஆறுதல் கூறி அழுகிறாள்.

அவன் கண்களிலிருந்து கண்ணீர் 'பொலபொல'வென உதிர்ந்தது. அவன் அவளுடன் பேசவேயில்லை!

''சுவாமி... என் தம்பியை மன்னிச்சுடு..., என்று ஆண்டாளின் மனம் பிரார்த்தித்தது!

ஆனால் கண்ணன் அவளை மன்னிக்கவில்லை என்பது அவளுக்கு எப்படித் தெரியும்?...

ஃ ஃ ஃ

அன்று கோயிலில் திருப்பாவைப் போட்டி! ஜில்லா கல்வி அதிகாரி ராமாமிர்த ஐயங்கார் தலைமை வகித்தார். குழந்தைகள் பாடின.

மழலைக் குரல் கேட்போரின் மனத்தை மயக்கிற்று! சின்னஞ்சிறு குழந்தைகள் திக்கித் திக்கிப் பாடின. பெரிய குழந்தைகளின் 'கணீ'ரென்ற குரல் இடையிடையே ஒலிக்கிறது. பக்தர் குழாம் சிரக்கம்பம் செய்கிறது!

''அடுத்த படியாக பாகவதர் அண்ணாசாமி ஐயங்காரின் புத்திரன் கண்ணன். ஐந்தாம் வகுப்பு, ஜில்லா போர்ட் பாடசாலை...'' என்று தலைவர் அழைத்தவுடன் கூட்டத்திலிருந்து தள்ளாடியவாறே வந்து நின்றான் கண்ணன்.

பசி, களைப்பு... வாடிய முகம்; நெற்றியில் மொட்டை நாமம் 'பளீ'ரிடுகிறது. வாரி முடிந்த குடுமிச்சிகை பளபளக்கிறது!

கண்ணன் தொண்டையைச் செருமினான். குரல் கம்மி அடைத்தது! சட்டையில்லாத மார்பில், நெஞ்சுக் கூட்டின்மேல் சரிந்து கிடந்த பூணூலைத் திருகிக் கொண்டே நின்றிருந்தான். தொண்டை வரவில்லை...

''கண்ணா... நாழியாச்சு; உம்...'' என்று அண்ணாசாமி அதட்டினார்.

'கணீ'ரென சிறுவனின் குரல் ஒலித்தது!

''புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்

வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ'' என்று ஆரம்பித்து...

''மெள்ள எழுந்த அரி என்ற பேரரவம் உள்ளம்

புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்''...

என்று முடித்ததும் எல்லோருடைய உள்ளமும் குளிர்ந்தன. பெருத்த கரகோஷத்தால் சிறுவனின் செவிகளும் குளிர்ந்தன. ஆனால் வயிறு!...

''பாகவதர் மகனோல்லியோ?'' என்ற குரல் காதில் விழும்போது அண்ணாசாமிக்குத்தான் என்ன மகிழ்ச்சி! ஆண்டாள் பூரித்துப் போனாள்.

போட்டியில் கலந்து கொண்டவர்களுக்கு மறுநாள் மாலை பரிசளிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டது... கூட்டம் கலைந்தது.

கூட்டம் கலைந்து பாகவதரும் ஆண்டாளும் புறப் படும்போது அவர்களுடன் வந்த கண்ணனைக் காண வில்லை! பாகவதர் தேடிப் பார்த்துவிட்டு 'வீட்டுக்குப் போயிருப்பான்' என்று எண்ணிக் கொண்டார்.

கோவிலின் வெளிப் பிரகாசத்தில் வடகோடியில் இருப்பது பஜனை மடம். அதன் சார்பில் நடப்பவைதான் மார்கழி மாத விழாக்கள் அனைத்தும்.

பஜனை மடத்திற்குள் சுவரருகே ஐந்தடி உயரத்திற்கு ஆண்டாளின் திருவருவப் படம். அதனருகே வெண்கல விளக்கொன்று மங்கிய ஒளி வீசிக்கொண்டிருக்கிறது. ஆண்டாள் திருவடிகளுக்குச் சமர்ப்பணமாக வாழைப் பழங்கள், தேங்காய்கள், கற்கண்டு, சுண்டல், இத்யாதி...

ஆண்டாள் திருவுருவின் மீது நிழல் அசைகிறது. அந்த வழியாக வந்த அண்ணாசாமியும் ஆண்டாளும் ஒரு வினாடி நிற்கின்றனர்.

அடுத்த கணம் நிழலின் கரத்தில் உரிக்கப்பட்ட வாழைப்பழங்கள் மறைக்கின்றன. தேங்காயைப் பல்லால் சுரண்டுவதும் தெரிகிறது.

அண்ணாசாமி மெள்ள பஜனை மடத்திற்குள் நுழைகிறார்.

'ஆ!... கண்ணண்ணா?' வென்று அலறுகிறார்.

'அப்பா...'

''அப்பாவா?... இங்கே வாடா... திருட்டு நாயே...' என்று சொல்லிக்கொண்டே அவன் மீது பாய்ந்து முதுகில் பேய் போல அறைகிறார்.

'அப்பா... இல்லேப்பா' என்று சிறுவன் அலறுகிறான். ஒரே கூட்டம். ஆண்டாள் மௌனாக அழுகிறாள். எல்லோரும் விஷயம் புரியாமல் திகைக்கிறார்கள். அண்ணாசாமி கோபத்துடன் வீட்டை நோக்கி விரைகிறார் தம்பியைத் தேற்றி வீட்டிற்கு அழைத்துச் செல்கிறாள் ஆண்டாள்.

ஃ ஃ ஃ

மாலை நேரம்.

கோவிலில் ஜனப்பிரளயம். ராமாமிர்த ஐயங்கார் திருப்பாவை மாநாட்டுப் பந்தலில் தலைமை ஆசனத்தில் கம்பீரமாய் வீற்றிருக்கிறார்.

பாகவதர் அண்ணாசாமி ஐயங்கார் மேடையில் நிற்கிறார். அவர் கழுத்தில் மலர் மாலை. மனசில் பக்தி வெறி. அதோ, கூட்டத்தில் முன் வரிசையில் உட்கார்ந்தி

ருக்கிறாளே, ஆண்டாள் அவள் வயிற்றில் பசி—பட்டினிப் புழு குடைகிறது.

''மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்

மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்''

என்று பாடிக்கொண்டு தன்னை மறந்து அண்ணசாமி ஆடினார். பக்தி பிரவாகத்தில் நீந்தினார். பக்தர்கள் ரசித்தனர் அண்ணாந்து கேட்டனர். 'அழகு அழகு' என்றனர். அதன் பிறகு? 'சுண்ணாம்புக் கதைதான்...

ஒரு மணி நேரத்திற்குப் பின் அவர் உபன்யாசம் முடிந்தது.

'ஆண்டாள் திருவடிகளே சரணம்' என்று கூறி அவர் முடித்ததும் காது செவிடு படும்படி கரகோஷம். அவர் செவிகள் அடைத்துக் கொண்டன. பசி இருள், கண்களை மறைத்தது.

சிறுவர் போட்டியில் கலந்து கொண்ட வர்களுக்குப் பரிசளிக்க தலைவர் எழுந்து நின்றார்.

''கண்ணன், ஐந்தாம் வகுப்பு, பஞ்சாயத்து போர்ட் பாடசாலை... முதல் பரிசு இருபது ரூபாயும் திவ்விய பிரபந்தத் திரட்டு என்ற புத்தகமும் முதற் பரிசாக அளிக்கப்படுகிறது!'' என்று அறிவித்தவுடன் ஜனக்கூட்டம் ஆரவாரித்தது.

''கண்ணன்... கண்ணன்...'' என்று பலர் கூவினர். கண்ணனைத்தான் காணோம்!

ஃ ஃ ஃ

'கண்ணா கண்ணா' வென்று அலறிவாறு ஆண்டாள் வீட்டிற்குள் ஓடினாள். அங்கேயும் கண்ணனைக் காணவில்லை.

''கண்ணா... கண்ணா...'' வெற்றிடங்களைப் பார்த்து பித்துப் பிடித்தவளைப் போல் கூவினாள் ஆண்டாள்.

பூஜையறையில் ராமர் படத்துக்கடியில் ஒரு காகிதம் இருந்தது. கண்ணன் எழுதிய கடிதம். மணி மணியான எழுத்துக்கள்.

''அம்மா மேலே சத்தியம் பண்ணி இந்தக் கடிதாசியை எழுதறேன் என் அம்மா செத்ததிலிருந்து எனக்கு ஆதர வில்லாம ஆயிடுத்து. ரெண்டு நாளா நான் பட்டினி கெடக்க என் அம்மா இருந்தா மனம் பொறுப்பாளோ? நான் பட்டினியிலே துடிக்கறச்ச என்னை நீங்க யாரும் கவனிக்கலே... காலையிலே அக்கா அடிச்சா; இப்போ அப்பா அடிக்கறார்... நான் பட்டினியும் பசியுமா இவங் கள்ட்டே அடியும் ஒதையும் வாங்கிண்டு எப்படி இருக் கறது. எங்கம்மா இல்லாத இந்த வீட்டிலே எனக்கு என்ன வேலை... நான் போறேன். எங்கேயா? எங்கேயோ போவேன்... உங்களுக்கென்ன? சுவாமிதான் என்னைக் காப்பாத்தணும். என்னிக்காவது நான் நல்ல நிலையிலே இருந்தேன்னா— ஒரு நாள் திரும்பி வருவேன். ராமா! என்னைக் காப்பாத்து! நான் போகிறேன்!

கண்ணன்

''ஐயோ! ண்ணா... கண்ணா'' ஒன்று அவள் கதறி னாள். அப்பொழுதுதான் அண்ணாசாமி வந்தார். கடி தத்தைப் படித்தார். கண் கலங்கி கண்ணீர் வழிந்தது! கடிதத்தால் முகத்தை மூடிக்கொண்டு 'ஐயோ கண்ணா' வென்று விக்கி விக்கி அழுதார் அண்ணாசாமி!

அதன் பிறகு சில மாதங்களுக்கெல்லாம் ஆண்டாள் வருக்குப் பாரமாக இருந்தாள். அவருக்குக் குடும்பக் கவலை வந்துவிட்டது!

எப்படியோ கஷ்டப்பட்டு ஆண்டாளை மேல அக்ர ஹாரத்துப் பார்த்தசாரதி ஐயங்கார் மகன் சீமாச்சுக்குக்

கல்யாணம் பண்ணி வச்சுட்டார். கண்ணனால் அவருக்கு குடும்ப பொறுப்பே உண்டாயிற்று.

சீமாச்சு, பெருமாள் கோயில் குருத்கள். எப்படியோ 'காமா சோமா'வென்று கல்யாணமாகி இப்பொழுது ஆண்டாள் கர்ப்பமாகவுமிருகிகிறாள்... இதுதான் மாசம்.

கல்யாணத்தன்று முழுதும் ஆண்டாள், கண்ணனை எண்ணியெண்ணி அழுதாள். தினசரி ஒரு முறையாவது தன் தம்பிக்காக அவள் அழுவது சம்பிரதாயமாகிவிட்டது.

அண்ணாசாமிக்குக் கண்ணீர் வற்றிப்போய் விட்டது. பக்தி வெறி தணிந்துவிட்டது! 'கண்ணா கண்ணா' வென்ற இதய ஓலம் மட்டும் நின்றபாடில்லை

'என்றைக்கோ திரும்பி வருவானாமே, என்று வருவான்? என் கண்ணன் என்று வருவான்?' என்று மனம் ஏங்கியது. 'என்றோ வருவான்' என்ற நம்பிக்கையில் வாழ்க்கை நகர்ந்தது.

ஃ ஃ ஃ

அடுத்த ஆண்டு— மார்கழி மாதம் திருப்பாவை விழா!

ஜில்லா போர்ட் ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் அனந்த சயனம் தலைமை வகிக்கிறார். 'நீங்க வந்து ரெண்டு வார்த்தை சொல்லிவிட்டுத்தான் போகணும்' என்று கட்டாயப்படுத்தியதினால் அண்ணாசாமி விழாவுக்கு வந்திருந்தார். ஆனால் மனம் எங்கோ சுழன்றது.

''சுவாமிகளே ஆத்திலேருந்து ஆள் வந்திருக்கு'' என்ற குரல் அவர் சிந்தனையைக் கலைத்தது.

''என்ன'' என்று உறக்கத்திலிருந்து விழித்தவரைப் போல் திரும்பினார்.

சீமாச்சு நின்றிருந்தான்!

''ஆண்டாளுக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கு. ஆத்துக்கு வாங்கோ''

''கண்ணன் பிறந்துவிட்டான், சீமாச்சு, நம்ம கண்ணன் பிறந்துட்டான்'' என்று கத்தினார் அண்ணாசாமி.

# உதயம்

**அஸ்தமனத்திற்குப் பிறகுதானே உதயம்?... கலைக் கோயிலில் புதியன உதியம்!... கலைகளின் உதயம்! மனிதனுக்கு வேண்டிய மனிதக்கலையின் உதயம்... என்றாலும் கலை?... அது ஒரு பித்து! அர்த்தமற்ற அர்த்தம்!**

---

**நா**கநாதன் பிறவிக்கலைஞன்! ஐம்பது ஆண்டுகளைத் தன்னுள் அடக்கி ஜீரணித்த இளைஞன்.

அதோ-ஓடையருகே, மலர்ச்சோலை நடுவே பசும் புற்றரையில் அவன் புரண்டு நெளிகிறான். செம்பொன் மேனியில் கருமை படர்கிறது... தசைக்கட்டுகள் உருண்டு திரண்டு மேடிட்ட மார்பு விரிந்து சுருங்குகிறது. கோபுரம் போன்று உயர்த்தி முடிந்த சிகையில் புழுதி படிகிறது...

அவன் உள்ளத்தில் பனிப்பாறையாக உறைந்து கிடந்த துயரக்கண்ணீர் தாங்க முடியாத சுமையாக நெஞ்சில் கனத்தது. அன்று அந்தப் பாறை வெடித்தது... சுமை குறைந்ததா?...

கறுத்து அடர்ந்த நீண்ட புருவ வளைவுகளுக்கடியில் 'பளபள'க்கும் நீள் விழிகளில் நீர் நிறைகிறது! மேகம் போல் புரண்டு கரியநிற அலைகள் அவன் பார்வையை மறைக்கின்றன. கார்மேகம் கவிந்த நிசிவானம் போல் நினைவிருள் திரை விரிக்கிறது. அந்த இருளில், ஜீவக் கடலில் நினைவு அலைகள் வெண்ணுரை கக்கிப் 'பளீ'ரிடு கின்றன. மரணக் குகையில் மன வெளிச்சம் பரவுகிறது...

ஃ ஃ ஃ

அதோ ஒரு புற்று! நிறைமாதக் கர்ப்பிணி ஒருத்தி அதைச் சுற்றி வலம் வருகிறாள்.

புற்றுக்கு முன்னால் பூக்குடலை, பழவகைகள், பால் செம்பு முதலியவை பூஜைக்காக வைக்கப்பட்டுள்ளன.

புற்றின் சிரத்தில் மலர்களைச் சொரிகிறாள். புற்று வாயில் பாலூற்றுகிறாள். மண்டியிட்டு வணங்கி நிமிர் கிறாள்.

அடி வயிற்றில், விலாப்புறத்தில்...

''அம்மா...'' கீழுதட்டை மடித்து வேதனையுடன் முணங்குகிறாள்.

ஐயோ என்ன வலி!...

வயிற்றை அழுத்திப் பிடித்துக்கொண்டு புற்றருகே சாய்கிறாள்.

கண்கள் இருள்கின்றன...அந்த இருளில் நாகசர்ப்ப மொன்று அழகுற நடம் புரிகிறது!

''நாகம்மா...என் வயிற்றில் பாலை வாரடி!...'' என்று பிரார்த்திக்கிறாள்.

தலை கனத்தது... புற்றின் மீது தலைசாய்த்து மயங்கிக் கிடக்கிறாள்...

அப்பொழுது ஒரு புதிய ஜீவன் உலகுக்கு அறிமுகமா கிறது! மயங்கிக் கிடக்கும் மாதாவின் உதிரத்தில், மண் சகதியில் மோனத்துயில் புரியும் அந்தச் சிசுவுக்கு உயிரூட்டு கிறது புற்றுநாகம்... அருகே படம் விரித்து நின்று ஆடு கிறது! குழந்தை இறந்துவிட்டதா?...

இல்லை; அசைவு இருக்கிறதே...

நாகத்தைப் போலவே அந்தக் குழந்தை நெளிகிறது...! புற்றுக்குப் பூசை நடத்தியதால் அவதரித்த குழந்தை யல்லவா?...

மரகதத்தாய்ச்சிக்கு வெகு நாட்களுக்குப் பிறகு தலைப்புத்திரன் பிறந்திருக்கிறான்!

அன்று மரகதத்தாய்ச்சியின் மகனுக்குப் பெயர் சூட்டப் போகிறார்கள்.

குழந்தையின் தகப்பனார் அம்பலவாணர் பூஜையறையில் நடராஜ விக்ரகத்திற்கு முன்பாக அமர்ந்திருக்கிறார்... அவர் அருகே பூக்குடலை, தட்டு நிறைய பழங்கள், கற்கண்டு, கோடி வஸ்திரம் முதலியன இருக்கின்றன.

மரகதத்தாய்ச்சி, குளித்து முழுகி, சரிகைப் பட்டுச் சீலை சரசரக்க பவித்திரமாகக் குழந்தையை இரு கைகளிலும் ஏந்திக்கொண்டு வந்து அவர் முன் நீட்டுகிறாள். தன் மடியில் தன் செல்வத்தைக் கிடத்திப் பெருமிதத்துடன் அவன் முகத்தைப் பார்க்கிறார் அம்பலவாணர்...

''மரகதம், நம் செல்வம் உயர்நத கலைஞனாய்த் திகழக்கூடியவன்... நாம் மறந்த கலையை அவனுக்குப் பயிற்றுவிப்போம்! நடனசபாபதி என நாமம் சூட்டுவோம்...''

விக்ரம் பெருமூச்சு விடுகிறது! அம்பலவாணர் திகைக்கிறார்... பெருமூச்சு விட்டது நடராஜர் அல்ல; அவர் கழுத்தில் நெளிந்த நாகம்... உயிருள்ள நாகம் சிலையை விட்டு இறங்கி மறைந்தது...

அம்பலவாணர் கரங்கூப்பித் தலை வணங்குகிறார்... அவர் கண் விழித்துப் பார்க்கும்போது நாகத்தை அங்கே காணவில்லை!

அவர் மடியில் குழந்தை புரண்டது; அதன் அசைவு நாக சர்ப்பம் நெளிவதைப் போன்றே இருந்தது!

''நாகநாதன்''... என்று அவர் உதடுகள் முணு முணுத்தன.

மரகதத்தாய்ச்சியின் புதல்வனுக்குப் பெயர் சூட்டி யாகிவிட்டது...

ஃ ஃ ஃ

அன்று!...

அம்பலவாணர் ஆற்றுக்கு நீராடச் சென்றிருக்கிறார். மரகதத்தாய்ச்சி பூஜைபறையில் ஜபத்தில் லயித்திருக் கிறாள்.

முற்றத்தில் தவழ்ந்து விளையாடிய நாகநாதன் தோட்டத்தை நோக்கி ஊர்ந்து செல்கிறான்.

அவன் தவழும்போது முழங்காலை ஊன்றித் தவழ்வ தில்லை... மார்போடு பூமியில் ஊர்கிறான்... பாம்பு செல் வதைப் போலவே செடிகளிலும் புதர்களிலும் புகுந்து மறைந்து வேகமாக ஊர்ந்து செல்கிறான் குழந்தை!

பூஜையறையிலிருந்து கையில் பிரசாதத்துடன் வெளியே வந்த மரகதம் குழந்தையைக் காணாது திகைக் கிறாள்.

தோட்டத்தில் நாகப்புற்றின் மீது ஏறி தவழ்ந்து விளையாடும் குழந்தையைக் கண்டு 'ஐயோ!'... என்று நெஞ்சு துணுக்குறுகிறாள். குழந்தை, புற்றுவாயில் கைவிட்டுத் துழாவுகிறது... புற்றின் மீதுள்ள பூச்சரங் களைப் பிய்த்து விளையாடுகிறது! அதன் மேனி முழுவ தும் குங்குமமும், சந்தனமும் பாலும் சேர்ந்து புற்றுச் சேறு குழம்பி இருக்கிறது.

மரகதம் இந்தக் காட்சியைக் கண்டு திகைத்து மயங்கி விழும் சமயம், ஆற்றிலிருந்து வந்த அம்பலவாணர் ஓடிச் சென்று அவளைத் தாங்கிப் பிடிக்கிறார்

அந்தக் குழந்தையின் வதனத்தில் அர்த்தமற்ற அர்த்தத்தோடு ஒரு புன்சிரிப்பு தவழ்கிறது!

நாகநாதனுக்கு இப்பொழுது வயது மூன்று!

அதோ, தத்திக் குதித்துப் புற்றை நோக்கி ஓடி வருகிறான்! புற்றருகே சுற்றி வீளையாடுகிறான். புற்று வாயில் இருக்கும் வாழைப் பழங்களை எடுத்துப் புசிக்கிறான்...' இன்னும் ஏதாவது இருக்கிறா... என்று புற்றுக்குள் கையை விட்டுத் துழாவுகிறான்... கையில் 'வழுவழு'ப்பாக என்னவோ நெளிகிறது!...

''நாகா...'' என்று அவன் தாயின் குரல் கலவரத்தோடு ஒலிக்கிறது!...

''தோ... வந்துத்தேம்மா...'' என்று ஓடுகிறான்.

கண்கள் கலங்க அவனை வாரியெடுத்து முத்தமிடுகிறாள் மரகதம்!

அம்பலவாணரின் மனதில், இனிமேல் பையனைப் புற்று பக்கம் விடாமல் கண்டித்து வைக்க வேண்டும் என்ற எண்ணம் விழுகிறது:

அன்று மாலை!

அவனுக்குத்தான் அந்தப் புற்றோடு என்ன உறவோ?... என்ன பித்தோ... தாயின் மடியில் இருப்பதைப் போல, அதன் மீது ஏறிக் குதித்துப் புரண்டு தவழ்ந்து விளையாடுகிறான்...

புற்று வாயில் கையை நுழைக்கும்போது பின்புறமாக வந்த அவன் தந்தைக்கு 'பகீ' ரென்றது! குழந்தையை முதுகில் 'பளா'ரென அறைகிறார்.

' இங்கே வராதேன்னு எத்தனை தடவை சொல்லது...'' என்று அதட்டுகிறார்.

பையன் சிறிது நேரம் கண் கலங்க நிற்கிறான். அவன் விழிகள் சினந்து தந்தையை நோக்கிக் குத்திட்டு நிற்கின்றன... அவன் முகம் சிவந்து குழம்புகிறது!... அப்பா!... அந்தக் குழந்தை முகத்தில் என்ன குரூரம்!...

அவர் மனம் அவனை அடித்ததற்காக வருந்துகிறது. அவனைத் தூக்குவதற்குக் கைகளை நீட்டுகிறார்...

'ஹூம்...' என்று சீறி அவர் கரத்தைக் கடிக்கிறான் நாகநாதன்!

''டே... டேய்... என்ன கோபண்டா... போக்கிரி;'' என்று செல்லமாக அவன் முதுகில் தட்டி அவனைத் தூக்கிக் கொள்கிறார்.

அவன் கடித்த இடத்தில் பல் பதிந்து லேசாக ரத்தம் கசிகிறது!

'பொல்லாத பயல்'!... என்று அவர் மனம் பெருமையோடு கூறிக் கொள்கிறது!

அன்று இரவு...

அம்பலவாணருக்கு ஒரே மயக்கம் கண்களைச் சுழற்றுகிறது...

''மரகதம்... கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா''... மரகதம் உள்ளே செல்கிறாள்.

அவர் பார்வை தொட்டிலில் உறங்கும் நாகநாதனின் பால் திரும்புகிறது... கண்களில் நீர் பள பளக்கிறது. மெள்ள எழுந்து தொட்டிலருகே செல்கிறார். குழந்தையை அணைத்து முத்தமிடுகிறார்.

கண்களில் மயக்கம்— அழுத்துகிறது...

நாகநாதனின் தொட்டிலடியில் முகம் புதைத்து வீழ்கிறார்... உறக்கம்!

அதென்ன உறக்கம்?...

மரகதத்தாய்ச்சியின் கையிலிருந்த செம்பு தரையில் உருண்டு 'கணகண'க்கிறது!... சீறியடித்த காற்றால் விளக்கு அணைகிறது... நாகநாதனின் தொட்டிலருகே என்னவோ சரசரத்து மறைகிறது!...

அதுதான் அம்பலவாணரின் ஜீவன் போலும்!...

அம்பலவாணரின் மறைவு மரகதத்தாய்ச்சிக்கு ஒரு பெரும் புதிர்!...

கலங்கி, அரற்றி, பித்துப் பிடித்துத் திகைத்துக் கிடந்தாள்... அவளைத் தேற்றி மீண்டும் மனுஷிபாக்கியது அவள் செல்வ மகன் நாகநாதன்தான்!...

ஃ ஃ ஃ

இப்பொழுது, நாகநாதன் பதினாறு வயது இளைஞன்!...

அவன் அழகிய இளைஞன்; சாந்தஸ்வரூபீ!... சிற்சில சமயங்களில் உணர்ச்சிப் புயல் உள்ளத்தே குமுறியெழும் போது ஒரு சீற்றம் பிறக்கும்... அப்பா... அது பாம்பின் சீற்றம்தான்...

அவன் உடல் பாம்பைப் போன்று, சாட்டை போல், உறுதியுடனும், லாகவமாகவும் அழகுடன் இருந்தது!

மரகதத்தாய்ச்சிக்கு, தன் கணவன் சொன்ன வார்த்தைகள் மனசில் ஓசையிட்டன!

"மரகதம்... உன் மகன் நடனக் கலை பயில வேண்டியவன்"

"ஆமாம்... நடனக் கலை" என்று அவள் உதடுகள் முணுமுணுத்தன!

நாகநாதனின் மனசில் கனிகிறது ஓர் ஆசைக் கனல்!...

புற்றிலிருக்கும் நாகம் ஆடுகிறதே; அதைப்போல் தானும் ஆடவேண்டும்; ஆட வேண்டும்... நாகத்தோடு போட்டியிட்டு நர்த்தனம் பயில வேண்டும்...

''அப்மா... எனக்கு நாட்டியம் பயிலவெண்டும்''... என்று அவன் தன் விருப்பத்தை தாயிடம் தெரிவிக்கும்கும் போது அவள் திகைத்தாள்... தான் நினைத்ததை அவன் சொன்னதால் வியந்தாள்...

''மகனே... நீ இளைஞனாகிவிட்டாய்... உன் பெற்றோர்களைப் பற்றி உனக்கொன்றும் தெரியா தல்லவா?... நாம் தேவதாஸி குலத்துதித்தவர்கள். வாழ்க்கையைக் கலைக்கே அர்ப்பணித்தவர்கள்... எப்படியோ, எனக்கும் உன் தந்தைக்கும் நேசம் மூண்டது. எங்கள் கலை வாழ்வு அதற்கு இடையூறாயிருந்தது... நாளடைவில் எங்கள் கலாமோகம் சிதைந்தது... நாங்கள் மணந்துகொள்ள விரும்பினோம். கணவனும் மனைவியு மாக வாழ விரும்பி, கலையை உதறி எறிந்து ஊரைவிட்டு வெளியேறினோம்... நமது பூர்வீகம் தில்லையம்பதி... உன் தந்தை உயர்ந்த நடன கலாசிரியராக இருந்தவர்... உன்னையும் கலைஞனாக்குவதில் எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சிதான்... ஆனால் ஒரு நிபந்தனை!''...

''என்ன நிபந்தனை?''

''மகனே!... இப்பொழுது உனக்கு மிகவும் சாதாரண மாகத் தோன்றும்... உண்மையில் அந்த நிபந்தனை சிரம சாத்யமானது... மகத்தான தேவ சாதனை... இயற்கையை வெல்வதாகும்... இயற்கையின் விதிகளை மீறுவதாகும்... உன்னாலாகுமா மகனே!''...

''அம்மா... என் கலைக்காக நான் எதையும் செய் வேன்... சத்தியமாக எதையும் சாதிப்பேன்...''

''உண்மையாகவா... மகனே''...

''என் நாகமாதாவின் மீது ஆணை''... என்று முகம் சிவக்க உணர்ச்சி வெறியோடு அவன் கூறும்பொழுது பூஜையறையில் பூக்குடலைக்கு அருகே என்னவோ சர சரத்தது!''

''மகனே நீ சிறந்த நர்த்தனனாவாய்''...

''தாயே... நிபந்தனை?...

''ஆம்;... நாகா... உன் இளமை, ஜீவிதம், ஆண்மை, உயிர் அனைத்தும் இந்தக் கலைக்கே அர்ப்பணித்தாக வேண்டும்... உன் காதலி உன் அகத்தே கொலு வீற்றிருக்கும் கலைவாணியாகவே இருக்க வேண்டும்!... அவளோடு நீ அடையும் இன்பமே உன் வாழ்வின் இன்பம் என நீ கருத வேண்டும்... பிரம்மச்சர்யக்கனல் உன் அகத்தே சுடர் விட உன்மேனி புது மெருகு பெறவேண்டும்... அப்பொழுதுதான் உன் அகவொளி அகிலத்தையெல்லாம் கலா போதையில் ஆட்டிப்படைக்கும் சக்தியாக மாறும்! நீ நர்த்தனன்! நாதா, நீ நர்த்தனன்... அதற்கு இந்த நிபந்தனைகளை ஏற்றுக் கொள்வாயா மகனே!''...

''அம்மா... நிபந்தனையைத் தெரிவிப்பதற்கு முன்பே நான் ஏற்றுக்கொண்டு விட்டேனே... இனிமேல் சிக்ஷை ஆரம்பமாக வேண்டும் தாயே!''...

''மகனே... நீ உயர்ந்த கலைஞனாவாய்...'' என ஆசீர்வதித்து அவனை நெஞ்சோடு சேர்த்து அணைத்துக் கொள்கிறாள மரகதத்தாய்ச்சி!

''தித்...தித்...தை...தித்...தித்...தை...
தித்தித்தை— தித்தித்தை...''

என்று மரகதத்தாய்ச்சியின் இனிமை மிகுந்த குரல் தாளமிசைக்க நாகநாதன் நர்த்தனம் பயில்கிறான்.

அன்றொரு நாள் இரவு...

மரகதத்தாய்ச்சிக்குத் தாளம் புரண்டது!

நடுநிசி!

வெளியே மழை கொட்டுகிறது. மின்னல் வானைக் கிழிக்க, இடி, போர் முரசம் கொட்டுகிறது. காற்று ஊளையிட்டு அழுகிறது.

மரகதத்தாய்ச்சி உடல் தளர்ந்து படுக்கையில் கிடக்கிறாள்...

''நாகா... நாகா...'' என்று ஹீனக்குரலில் அழைக்கிறாள்...

''அம்மா...'' என்று நித்திரை விழித்த நாகனின் குரல் பரிவுடன் ஒலிக்கிறது. விளக்கைத் தூண்டுகிறான். குத்து விளக்கு ஜகஜ்ஜோதியாக சுடர் விடுகிறது...

''என்னைத் தூக்கி உட்காரவை...''

அவளை வாரியெடுத்து பஞ்சணையில் சார்த்தி அமர்த்துகிறான்.

''நாகா... எங்கே, அந்த... பொன்னம்பல நடனம்... சிற்றம்பலக்கூத்து... மானிடப் பிறவியின் மான்மியக் காட்சி... ஒரு முறை உன் தாய் பார்க்கட்டும்''...

''ஆகட்டும் தாயே...''

அவள் எதிரே நிற்பது நாகநாதனா? அல்லது, திரிபுர மெரித்தோனா?

இடது தொடை அடி வயிற்றில் பொருந்தப் பாத முயர்த்தி, வலது கால் சற்றே வளைந்து நிற்க, இடது கரம் நீண்டு இடது பாதத்தைக் காட்ட, வலது கை, மார்புடன் குறுகி அபயமளிக்க, இடை ஒடுங்கி மார்பு அகன்று

சிரம் பெருமிதத்துடன் நிமிர, வதனத்தில் சாந்தியின் நிறைவு பொங்கிப்புரள, இதழ்க்கடையில் தெய்வீகப் புன்னகைப் பதுங்கி ஒளிய, சிற்றம்பலச் செல்வனாக, சிவகாமி மகிழ் கூத்தரசனாக நின்று காட்சி தருவது நாக நாதனா? சிவபிரானா?

''குனித்த புருவமும்...'' என்று அவள் கசிந்துருக, அவன் தன்னை மறந்து கம்பீரமாக ஆடுகிறான்...

வெளியே மழை நின்றது! பாட்டும் ஆட்டமும் நின்றது... மரகதத்தாய்ச்சியின் ஹிருதயதாளமும் நின்றது... நாகநாதனின் குருவான, அன்னையான மரகதத்தின் ஜீவன் அதோ, பூஜையறையில் கூத்தரசனின் அருகே சுடர் விடும் தீபஜோதியில் ஒன்றிவிட்டது

ஃ ஃ ஃ

நாகநாதன் இப்பொழுது தனியன்! அவன் கலையை உலகம் வியந்தது... அவனது கலை இன்பத்தில் மோகப் பரவசமெய்தி சிரக்கம்பம் செய்தது! புற்றருகே உள்ள அவனது சிறுகுடில் இப்பொழுது மாபெரும் கலைக்கோயி லாகப் பரிணமித்திருந்தது! கலையார்வமிக்க நூற்றுக் கணக்கான யுவர்களும் யுவதிகளும் அவனை ஆசானாகக் கொண்டு கலை பயின்றனர்!

மாலை நேரத்தில், புற்றருகே உள்ள பாறைமீது அமர்ந்து வேய்ங்குழலில் கானமழை பொழிவான் நாக நாதன்; அந்தக் கானத்தின் இனிமையில் தென்றல் மெய் சிலிர்ப்பாள்!... அசைவற்றுத் தெளிந்த ஓடை நீரில் தரங்கங்கள் தோன்றிப் பூரிக்கும்!.. புற்றுக்குள்ளிருக்கும் நாகத்தை - அதன் உள்ளம் குளிர்ந்து உடலில் இன்பவெறி புகுந்து - வெளியே உந்தித்தள்ளும் அவன் கானம்!

“மகனே...'' என்று அவனைத் தழுவி முத்தமிட்டு மகிழ அது மனிதப் பிறவியல்ல. என்றாலும், அதன் கண்

களில் - தாய்மையின் கனிவோ, தன் அருளால் ஜனித்த, உயிர்பெற்ற புதல்வனின் கலா மேதத்வம் என்று உணர்ந்ததனால் ஏற்பட்ட பெருமிதமோ... என்னவோ ஒரு உணர்ச்சி மின்னலிடும்!...

புள்ளாங்குழலின் இன்ப நாதத்திற்கேற்ப, நாகம், உடல் விம்மி... படம் நிமிர்த்தி நின்று நெளிந்து அபிநயம் புரியும்!...

குழலின் இனிமை!... அது எங்கு பிறந்தது... அந்த மூங்கிலிலா?... அவன் இதழ் ஈரத்திலா?... அல்லது அவன் உள்ளத்தின் அடி ஆழத்தில் சுரந்து, உதடுகளின் வழியே பொங்கி வழிந்த கான மதுவா?... அதில்தான் என்ன மயக்கம்!... என்ன கிறக்கம்!...

அந்த இசை, விண்ணில் இழையும்! மேகத்தோடு உறவாடும்!... நாகம்மாள் நெளிந்து நெளிந்து ஆடுவாள்! அவனுக்குத்தான் அந்த ஆட்டத்தில் என்ன லயிப்பு..

பிறகு நாகம்மை மயங்கி சுருண்டு பூமியில் கிடப்பாள். அவன் ஆடுவான்! அவன் விழிகளில் அதே பளபளப்பு... அவன் சுவாசத்தில் அதே சீறல்... அவன் உடலில் எலும்புகள் உருகிவிட்டனவா?... என்ன நெளிவு... அவன் பாம்புப் பிறவி; நாக நர்த்தனன்!

அப்பொழுதுதான் அவனிடத்தில் சிஷ்யையாகி நடனம் பயின்றாள் வசுமதி! வசுமதி, தாசி குலத்துத் தவப்பயன்! கலைவாணியின் அடிமை!... கலைவாழ்வே அவள் ஜீவன் அவள் அவனுடைய பிரதம சிஷ்யை!

நாகன் எந்தெந்த பாவங்களைக் கொண்டு அபிநயிக்கிறானோ, அவையெல்லாம் தன்னிடையே, கண்ணாடியில் விழும் நாகனின் நிழலைப்போல பிரதிபலிக்க நடனம் பயில்வாள் வசுமதி! வசுமதி நாகநாதனுடன் சமபீடத்தில் நின்று ஆடும் திறமையுள்ளவள். ஆனால் ஒரே குறை!... அவளுக்கு நாக நர்த்தனம் தெரியாது! அவளுக்கு அதைக்

கற்பிக்க வேண்டியது அவன் கடமை! நாக நர்த்தன சிக்ஷ விஷயம் மிகவும் ஏகாந்தமானது - அறியாதது.

ஒருநாள், அவளைப் புற்றருகே அழைத்துச் சென்றான்!

குழலிசை, நாகவிஜயம், நடனம் அனைத்தையும் கண்டு வசுமதி பிரமித்தாள்... பல நாட்கள் அவனுடைய அங்க அசைவுகளைப் பயின்றாள்...

பிறகு ஒருநாள்...

அவள் குழலிசைக்க அவனுக்கு வலப் புறத்தில் நாகமும் இடப்புறத்தில் வசுமதியும் நடனம் பயிலும் நேரத்தில் அவனே திகைத்தான்... எது நாகம்? எது பெண்?...

நாகனின் பார்வை வசுமதியின் பால் திரும்பும் போதெல்லால் அவன் திடுக்கிட்டான்... அவள் கண்களில் ஒரு புதிய கிறக்கம், விபரீத ஆசை!

ஓடையருகே, மலர்ச்சோலை நடுவே, பசும்புற்றரையில் சதங்கையணிந்த அவர்கள் பாதங்கள் 'கிணுகிணு'க்க நடந்து வரும்பொழுது - குயிலினங்களின் மோகன சப்த ஜாலங்கள் இதயத்தைத் தழுவ, கண்களில் கரைதத்தி வழியும் வேட்கையோடு நாகனைப் பார்க்கிறாள் வசுமதி! ''வசுமதி... கலையைச் சிதைக்காதே!... உன் இளமை, இதயம், வாழ்வு அனைத்தும் கலைக்கே!... கேவலம் மானுடன் மீதுள்ள நிலையற்றப் பற்றினால் தெய்வீகக் கலையின் பெருமையைக குலைத்துவிடாதே, அம்மா!...'' என்று நெஞ்சுருகக் கூறுகிறான்...

''ஸ்வாமி... என்னைத் திரஸ்கரிக்காதீர்கள்...'' என்ற வார்த்தைகளைத் திக்கிததிக்கிக் கூறி முடிப்பதற்குள் அவள் விழிகளில் கண்ணீர பெருகுகிறது!

''வசுமதி!... அது சாத்யமல்ல...''

''ஸ்வாமி...''

''போ!... ஆண்டவன் சந்நிதியில் உறுதி வேண்டித் துதி செய்!... போ... அம்மா... போ!...'' அவன் ஆறுதல் மொழியால் அந்தப் மனப்புயல் அடங்கிவிடுமா?... இல்லை! இதயம் அதிரச் சீறிச் சாடும் உணர்ச்சி அலைகளைச் சமாளிக்க முடியாமல் தவிக்கிறாள் வசுமதி!

மறுநாள் மாலை! புற்றருகே குழலோசை; நாகம் ஓர் புறம் வசுமதி மற்றோர் புறம்... நடனக்காட்சி!

வசுமதிக்கு ஆட்டம் தளர்கிறது!... அவள் பார்வை பாவத்திற்கேற்ற சலனமின்றி நாகன்பால் நிலைகுத்தி நிற்கிறது! அவன் மனமும் சற்றே நெகிழ்கிறது!... படத்தைப் பூமியில் அடித்துத் துடியாய்த் துடிக்கிறாள்...

''ஸ்வாமி...'' என்று நெஞ்சு விம்மக் கூறி நாகனின் பாதங்களில் வீழ்கிறாள் வசுமதி!... நாகனின் கண்களில் கண்ணீர் பெருகுகிறது! அவன் பாதங்களில் சிரம்பதித்திருந்த வசுமதி 'ஆ'வென்றலறுகிறாள்.

அவள் கணுக்காலில் உதிரம் வழிகிறது! புற்றருகே நாகம் சரசரத்து மறைகிறது! வசுமதியின் நீலம் பார்த்த சடலம் பூமியில் நீண்டு கிடக்கிறது.

ஃ ஃ ஃ

காலத்தின் கரியநிழலும், பிரகாசமிக்க தேஜசும் மாறி மாறி இயற்கைக்கு முதுமையளிக்கின்றன!

ஆனால் நாகன்?... ஐம்பது ஆண்டுகளைத் தன்னுள் ஒடுக்கிய இளைஞன்! அவன் இளமை அழியக்கூடியதன்று.

அவனுடைய பிரும்மாண்டமான கலைக்கோயிலில் கூத்தும் பண்ணும், நாடகமும் இசையும், ஓவியமும் சிற்பமும் இலக்கியமும் சமயமும் தழைத்துச் செழிக்கின்றன.

இவற்றிற்காகவே தன் வாழ்வை அர்ப்பணித்த நாக னுக்கு தன் அன்னைக்குக் கொடுத்த வாக்குறுதி நிறை வேறுவதில் என்ன நிம்மதி...என்ன பெருமிதம்!

ஆனால்... வசுமதி போன்ற பிரதம சிஷ்யைகளால் இழுக்கு நேரவிருந்தது!

அதுவும் நாக நர்த்தனப் பயிற்சியின்போதுதான் இந்தச் சோதனை! அவனுடைய அபிநயத்தைக் காணும் போழ்து—அதைப் பயில முற்பட்டு அதில் மயங்கி நிற்கும் அவர்கள் மனத்தில் அந்த லாகவமான பொன்னுடலைத் தழுவவேண்டுமென்ற காதல் பிறந்தது!... அவர்கள் இதயம் வெறிகொண்டன;... குழம்பினர்... குருநாதனின் நர்த்தன கோலம் அவர்கள் மனத்தில் பேய் நிழல் தட்டிற்று! அவர்கள் கலையை, கலையுள்ளத்தை, கலை மீதுள்ள பக்தியைச் சிதறடித்தது; அந்தப் பொன்னுடலுக் காக எதையும் இழக்க சித்தமாயிருந்தனர்.

அந்தச் சில வினாடிகள்... அவனும் மனம் நெகிழ்ந் தான்... நெக்குருகினான்... அதனால், வசுமதிக்கு நேர்ந்த கதியே அவனைக் காதலித்த அனைவருக்கும் நேர்ந்தது.

முப்பது ஆண்டு காலத்தில்... அவன் கலைக்கோயிலின் கர்ப்பக்கிருஹக் கலாதேவிகளில் அநேகர் நாகம்மையின் சீற்றத்துக்குப் பலியானார்கள். அது அவன் காதலின் தன்மை.

அவன் ஹிருதயம் வெம்பித் துடித்தது... தன் பொருட்டு, எத்தனை அழகிய யுவதிகள், உன்னதக் கலா ராணிகள், பலியாகின்றனர் என்று எண்ணும் பொழுதெல் லாம் விம்மிவிம்மி அழுதான். என்றாலும் தன் பிரதம சிஷ்யைகளுக்கு நாகநர்த்தனம் பயிற்றுவிக்காமல் இருக்க அவனால் முடியவில்லை! அப்படி இருந்தால் அது கலைக்கு இழைத்த துரோகமல்லவா?...

ஆனால், அவனுடைய கலைக்காக எத்தனை பலி! புற்றருகே நீலம் பாரித்துக் கிடந்த கன்னிப் பெண்களின் சடலம் எத்தனை யெத்தனை?... ஐயோ, இதென்ன பாவம்?...இதற்கு விமோசன முண்டா? என்று அவனுள்ளம் வெதும்பியது.

அப்பொழுது நாகநர்த்தன சிக்ஷை பெறவேண்டிய முறை பூங்குழலி என்ற கலா ராணிக்கு... வழக்கம் போலவே ரகசிய சிக்ஷை ஆரம்பமாகியது.

பூங்குழலி என்ன ஆவாளோ என்ற வேதனையில் இரவு பகலாக மனம் துடித்தான் நாகன். கடமையென்ற ஒரே உணர்ச்சி அவனைக் கொடியவனாக்கிறறு. அவளுடைய விதி விட்டவழி என்றே திடமடைநதான்.

செந்நிறமாக மேல்வானம் சிவந்தொளிரும் சோக நிழலில் வேயங்குழலின் நாதம் விண்ணைத் தழுவுகிறது. புற்றருகே, பூங்குழலி ஓர் புறத்தே, நாகம்மை ஓர் புறத்தே நடனம் பயிலும் காட்சி நாகனுக்கு சோக நாடகம்.

ஆனால் இம்முறை ஓர் புதுமை. பூங்குழலி மற்றவர் களைப் போல், கலைக்காக வாழ்ந்தவளல்ல; கலைக் காகவே பிறந்தவள்... வெறும் 'மாமிச வெறி'யும், மனிதப் புழுக்களின் உறவும் அவளுக்குத் தேவை இல்லை. நாகன் மட்டும், சூடுகண்ட பூனையாதலால் அவளைச் சந்தேகித் தான்.

நாகத்தின் விழிகளிலாவது தாயின் பெருமிதம். அவள் விழிகளில் கலை ஆர்வம் மட்டுமே... அவள் ஆடுகிறாள்... நாகம் ஆடுகிறது... நாகனின் மனோபீடம் ஏன் ஆடு கிறது...?

பயிற்சி முடிந்து திரும்பும்பொழுது— முப்பது ஆண்டு களுக்கு முன்பு வசுமதியுடன் வந்தானே அதே இடத்தில், அதே நிலையில்... மனோநிலையில் மட்டும் சிறு வேறு

பாடு... அன்று வசுமதிக்கு இருந்த மனோநிலை இன்று அவனுக்கு...

எல்லோரும் அவன்மேல் காதலுற்று அவன் உறுதியைக் கலைக்க முயன்றதனால் நாகத்தால் தண்டிக்கப் பெற்றார்கள் என்பதே அவன் கண்ட சரிதை ஆனால்... இந்தமுறை... பூங்குழலிக்கு அவன்பால் காதல் மூளாதது அவனுக்குப் பெருத்த ஏமாற்றமாகவே இருந்தது. அவன் உள்ளத்தில் பிரளயமே மூண்டது. அவள்பால் அவன் மனம் தீயாகச் சுழன்றது. நாகத்தின் சீறல் போன்று பெருமூச்சுகள் அவன் நெஞ்சைக் கிழித்தன.

''...என் கலை அழியட்டும்... என் உறுதி சிதையட்டும்... என் பிரம்மசர்யக் கோட்டை தகரட்டும்... என் வாழ்க்கை நசிந்துபோகட்டும்... ஆனால்,... நாகத்தைப் போன்று வளைந்து நெளியும் பூங்குழலியின் பொன் மேனியை ஒருமுறை ஆரத்தழுவி... அவள் நெஞ்சகத்தின் மீது நெளிந்து கிடக்கும் தரளமாலை, என் நெஞ்சில் பதிய... அவள் செவிக் குண்டலம் என் கன்னங்களில் உரச... அவள் காற்சலங்கை என் பாதத்தோடு உறவாட, அவள் இடை மேகலை துவண்டு சரிய அவளை... என்றெல்லாம் நெஞ்சில் எண்ணங்கள் அலைக்கழிய ஒரு சீறல் மூச்சு... ''பூங்குழலி''... என்று தொண்டை உணர்ச்சி அடைப்பில் கரகரக்க அவள் புஜங்களைப்பற்றி முகத்தருகே குனிந்தான்.

''ஸ்வாமி...'' தீயைத் தீண்டியவள்போல் துடித்தாள் பூங்குழலி. அவன் பிடியிலிருந்து திமிறினாள்.

''பூங்குழலி...'' பாம்பின் சீறல்போன்ற அவன் வெப்பமான மூச்சு அவளைத் தகித்தது. ''குருதேவா... எனக்குத் தாங்கள் தந்தையல்லவா?...'' அவள் குரல் நடுங்க கண்களில் கண்ணீர் பெருகிற்று. ''பல்லாயிரக் கணக்கானவர்களின் தெய்விகக் கனவான கலைக் கோயிலைச் சிதைக்

காதீர்கள்... நமது உழைப்பால் உயர்ந்த கலைக் கோயிலின் சிகரத்தின்மீது மாசு படியவேண்டாம்... குருநாதா... என்னை விடுங்கள். நாகத்தின்மீது ஆணை... கலையின் மீது ஆணை... தேவா... தேவா...'' என்று அலறி மூர்ச்சித்தாள் பூங்குழலி... நாகநாதனின் பிடி தளரவில்லை.

அவன் முகத்தில் ராக்ஷஸ குரூரம்... ஒரு பேய்ச் சிரிப்பு... அவளை இறுகத் தழுவியவாறு கூக்குரலிடுகிறான்.

''பூங்குழலி... உன் ஆணைகள் புதியவை அல்ல;... நான் எப்பொழுதோ அவற்றை மீறிவிட்டேன்... நான் தேவனல்ல; மனிதப் புழு!... மனிதன் மனிதனாக இன்பந் துய்க்கவேண்டும்!... தெய்வாம்சமுள்ள நாகத்திற்கு விஷமில்லையா?... நஞ்சு மட்டுமே, நாகம் நாகமாக இருக்கப் பெருமையளிக்க வல்லது. நாகத்திடம் விஷமில்லாவிட்டால், அது ஒரு புழு. ஆண்மையோடு— மனிர இன்பத்தை அனுபவிக்காத மானுடன், மனிதனுமல்ல; தேவனுமல்ல!... நான் மனிதன்... மனிதன்...'' என்ற அவன் கூக்குரல் ஒடுங்குகிறது!... கண்கள் இருள்கின்றன... அவன் காலடியில் நாகம்மை படமுயர்த்தி கோரஸ்வரூபமாக நின்றிருந்தாள்;... அவன் கணுக்காலிலிருந்து வழிந்த உதிரம் பூமியை நனைத்தது. அவன் பிடிதளர்ந்தது. சுழன்று பூமியில் வீழ்கிறான். மூர்ச்சை தெளிந்த பூங்குழலி அலறினாள்.

அதோ, நர்த்தனன் நாகநாதன் புற்றருகே அருவம் போல் அசைகிறான்.

மேற்றிசை வானத்தின் செக்கர் வெள்ளத்தில் மறைந்தே விடுகிறான். அவன் வந்த வேலை முடிந்தது— போய்விட்டான்.

சிரம் நிமிர்த்தி நிற்கும் கலைக்கோயில் சோக இருளில் அமிழ்கிறது. பிறகு, புதிய ஒளி, கலையொளி பரவுகிறது.

அஸ்தமனத்திற்குப் பிறகுதானே உதயம்... கலைக் கோயிலில் புதியன உதயம்... ஆம்; கலைகளின் உதயம்... மனிதனுக்கு வேண்டிய மனிதக் கலையின் உதயம்... தெய்வீகமானால் என்ன? மனிதத்வம் ஆனால் என்ன? என்றாலும் கலை... அது ஒரு பித்து... அர்த்தமற்ற அர்த்தம்...

கலைக்கோயிலில்— கூத்தும் பண்ணும், நாடமும் இசையும், ஓவியமும் சிற்பமும், இலக்கியமும் சமயமும் தழைத்துச் செழிக்கின்றன.

''தகதிமி... தகதிமி...

தத்திமி... தகதிமி''

அதோ, பூங்குழலி நாக நர்த்தனம் புரிகிறாள்.

# பிழைப்பு

**கடற்காற்று, சீறிச் சுழன்றது! கடலலைகள், வானை நோக்கிப் பாய்ந்துச் சாடின... கடலோடு காற்று முயங்கிக் குழம்பித் தறிகெட்டுச் சுழன்றது.**

**அந்தச் சூறாவளியில் ஓர் சடலம் சுழன்று திரிந்து அலைக்கழிகிறது...**

**அதுதான் பிழைக்கப் போனவனின் கதி!**

---

வானவீதியில் ஒளி சிந்திச் சிலிர்க்கும் தாராகணங்கள் இருண்டு கவிந்த வானம் கன்னங்கரிய கடல்: வரம்பற்ற நீர்ப்பரப்பு. கடல் நடுவே படகொன்று செல்கிறது. படகில் ஐந்துபேர்தான் பிரயாணிகள். கறுத்த இரண்டு உருவங்களின் வலுமிக்க புஜங்களில் வியர்வை வழிய துடுப்புகள் நீரிற் சுழல்கின்றன.

படகில் அமர்ந்திருக்கும் ஐவரில் ஒருவன் இளைஞன். மற்றவர்கள் நடுத்தர வயதுடைய ஏழைகள்... ஒருவன் சரிகை அங்கவஸ்திரக்காரன். அந்த இருளில் அவன் காதிலுள்ள வைரக் கடுக்கன் மின்னுகிறது.

அலையில் படகு அல்லாடுகிறது. ஒருவர்மீது ஒருவர் சாய்கின்றனர். ஒருவராவது வாய்திறந்து பேச வேண்டுமே... உள்ளம் கனத்தால் வாய்திறக்குமா?

அந்த இளைஞனின் கண்கள் கலங்குகின்றன. சோகமும் பீதியும் அவன் இதயத்தை அழுத்துகின்றன... பாய்மரம் 'சடசடக்கிறது... படகைக் காற்றா தள்ளு கிறது?... இல்லை... விதி தள்ளுகிறது!...

அவன் விழிகள் படகுவந்த திசையை— சூன்ய இருள் மண்டிக்கிடக்கும் பிறந்த பொன்னாட்டை ஏக்கத்தோடு பார்க்கின்றன... அவன் விழிகளுக்கு அந்த இருளின் சூன்யத்தை வெட்டிக் கிழித்து பார்வையை ஓட்ட சக்தி இருந்தது. ஆனால் அந்த இருளை விலக்கி சோதியாகிச் சுடர் விடச் சக்தி இல்லை. தாய்த்திருநாட்டை நோக்கிக் குத்திட்டு நிற்கும் அவன் விழிகளில் கண்ணீர் திரை இடுகிறது.

ஒரு பெருமூச்சு.

இமைகள் மூட, கன்னத்து எலும்புக் குழியில் கண்ணீர் வடிந்துத் துளிக்கிறது.

படகோட்டி மெல்லிய குரலில் எச்சரிக்கிறான்.

''கரைக்கு வந்துட்டோம்...''

''இனிமேதான் உஷாராயிருக்கணும்...''

அந்தப் பிரயாணிகளின் முகத்தில் சோகத்தின் கீறல் படிந்த மகிழ்ச்சி ரேகைகள் படர்கின்றன! தங்கள் 'சுவர்க்க பூமி' நெருங்கி விட்டதைப் போன்ற சபலம்!

இளைஞனின் உள்ளம் ஆண்டவனுக்கு நன்றி கூறு கிறது!

கடலின் அலைகள் 'தள தள'க்கின்றன. துடுப்பு வீச்சின் 'சலக்...சலக்' கென்ற... சப்தத்தைத் தவிர ஓரே நிசப்தம்...

எதிர்த்திசையிலிருந்து திடீரென நான்கைந்து 'டார்ச்' லைட்டுகள் நடுக்கடலை நோக்கிப் 'பளீ'ரிடுகின்றன!

''ஐயோ!''... வெனப் படகுக்காரன் அலறுகிறான்...

'டார்ச்' லைட்டுகளின் ஒளிவீச்சு கடலைத் துழாவு கிறது!

படகின் துடுப்புகள் திசைமாறிச் சுழல்கின்றன! படகுப் பிரயாணிகள் தலை தெரியாது குனிந்துகொள் கின்றனர்... சரிகை அங்கவஸ்திரக்காரன் மட்டும் தலையைத் தூக்கி மேலே பார்க்கிறான்...

ஒரு நிமிஷம்...

இரண்டு நிமிஷம்...

ஒரு 'டார்ச்' லைட்டின் வெளிச்சம் சுழன்று திரும்பு கிறது!

அதோ!... படகின் மீது ஒளி வட்டம் விழுந்து கடல் நீர் பிரகாசிக்கிறது! சரிகை அங்கவஸ்திரக்காரன் குனிந்து தலை மறைத்துக் கொள்கிறான். துடுப்புகள் ஒரு வினாடி ஓய்வு பெறுகின்றன.

''விர்...விர்...''ரெனக் கவரயிலிருந்து 'விசில்'கள் அலறுகின்றன.

படகு, வட திசை நோக்கி விரைகிறது! சரிகை அங்க வஸ்திரக்காரன் கலவரத்துடன் கூறுகிறான், பிரயாணி களைப் பார்த்து...

''உம்... இறங்கு... ஐயா... கரைக்கு வந்தாச்சு... இங்கே இடுப்பளவுதான் ஆழம்... உம் சீக்கிரம்... கரைக்குப் போகலாம்''

படகோட்டிகள் மௌனம் சாதிக்கின்றனர்...

ஒருவர் பின் ஒருவராக நான்கு பிரயாணிகளும் கடலுக்குள் சரிகின்றனர்.

கடைசியாக இளைஞன் இறங்குகிறான்... ஒருகையால் படகைப் பிடித்துக்கொண்டு நீரில் இறங்குகிறான். ஆழம்!... இடுப்பளவா?... கழுத்துவரை... அதற்கும் அதிகம்!...

'ஐயோ!... அது நடுக்கடல்!... அவனுடைய சக பிரயாணிகள் அதோ, திக்குமுக்காடுகிறார்கள்! அவன்

படகைப் பிடித்து ஏற முயல்கிறான்... அவன் கையைப் பிடித்து நீரில் தள்ளுகிறான் சரிகை அங்கவஸ்திரக்காரன்... படகு வந்த திசைநோக்கித் திரும்புகிறது...

இளைஞன் தன் சக பிரயாணிகளையும், படகையும் இப்பொழுது பார்க்கவில்லை... கைகளை எட்டி வீசி நீந்துகிறான்... நீந்துகிறான்...

நாசியிலும் வாயிலும் கடல் நீர் புகுகிறது... அவ்வளவு தான் அவனுக்கு நீந்த முடியும்.

'அட, பாவி... என்று சரிகை அங்கவஸ்திரக்காரனை சபிக்க வாய் திறக்கும்போது அவனுள் கடல் நீர் புகுந்து மரணத்தைத் துரிதப்படுத்துகிறது.

அவனுக்கு இப்பொழுது யாவும் பொய். அவன் மனைவியின் கண்ணீர்... முதுமையடைந்த பெற்றோரின் பாசம்... அவனுக்குப் பிழைக்க வழிகாட்டிய 'புண்ணிய வாளனின்' ஆசை வார்த்தைகள் யாவும் க்ஷணநேர மாயையாகி விட்டன. மரணம் ஒன்றே நிதர்சனமான தோற்றத்தோடு அவனை எதிர் நோக்கி இருகை நீட்டி அழைக்கிறது. அதோ, அவன் மரணத்தின் கரங்களில் தத்தி தத்திப் புரள்கிறான்... இன்னும் கூட நம்பிக்கை... உயிர் பிழைக்க முடியும் என்ற நம்பிக்கை... நீந்துகிறான்... உயிர்! அதென்ன அவ்வளவு சமான்யமா?

ஃ ஃ ஃ

''திரை கடலோடியும் திரவியந்தேடுன்னு சொல்லு வாங்க. நீ, யாரப்பா... பொழைக்கத் தெரியாத ஆளு. சிலோன்லே இங்கே மாதிரி பட்டினி கெடந்து சாகிறதுங்கறது இல்லே... கையில மூணு துட்டு இல்லாமெ போன பயலுவல்லாம் ரெண்டு வருசத்திலே லெச்சாதி பதியாயிட்டானுவ...'' என்று நீட்டி முழக்கினான் சரிகை அங்கவஸ்திரக்காரன்!...

"அதெல்லாம் சரிதாங்க... உள்ளூர்லே கஞ்சியோ கூழோ குடிச்சாலும் குடும்பத்தோடே இருக்கறமாதிரி ஆகுங்களா?..." என்றான் அந்த வாலிபன்!

"அது சரி... நான் என்னத்தை அதுக்கு மேலே சொல்றது... காலத்துக்குத் தகுந்த மாதிரிதானே புத்திப் போகும்... என்னவோ நமக்குத் தெரிந்த புள்ளையாச்சேன்னு சொன்னேன்... அப்புறம் உன்னிஷ்டம்..."

"அப்ப... என்ன சொல்றீங்க" என்று குழம்பிய மனத்தோடு கேட்டான் இளைஞன்

"நான் சொல்றபடி கேளு... நம்ம செட்டியாருக் கிட்டே நானே கொண்டுபோயி ஒன்னெ ஒப்படைச்சுடுறேன்... கடையிலே அப்படி ஒண்ணும் வேலை இருக்காது. சாப்பாடெல்லாம் போட்டு மாசம் எண்பது ரூபா குடுப்பாங்க... நல்ல காசு பொரள்ற இடம்... நம்ம தமிள் ஆளுங்க பொளைச்சி போகட்டுமேன்னுதான்...இல்லாட்டி அங்கே இல்லாத ஆளா?... வெள்ளிக்கிளமை தோணி போவுது... மூணு ஆளுவ வருது... நீயும் வந்தா ...வா..."

"... ... ..."

"ஒண்ணும் கவலையே இல்லை... அங்கே போனா தெரியும்... அப்புறம் சொல்லுவே... சிங்களத்துக் குட்டிகளை பார்த்துக்கிட்டே இருந்தாலும் போதுமே!..."

"சே... சே... அதெல்லாம் எதுக்குங்க? பொழைப்பு கெடச்சா போதும்..."

"அட, ஒனக்குச் சொல்லலை... அவ்வளவு நல்ல ஊரு... ஜனங்கெல்லாம் நல்லா இருப்பாங்கன்னு சொல்றேன்..."

"... ... ..."

''இன்னம் யோசனை பண்றீயா...சம்பளம் அல்லாமெ பல வழியிலேயும் காசு சேறும்... ரெண்டு வருஷத்திலே ஒரு 'லகரம்' சேத்துக்கிடலாம். நமக்குத்தான் தோணி வழி இருக்கவே இருக்கு...நெனைச்சா வந்துட்டுப் போலாமே... என்ன சொல்றே...''

''ஆகட்டுங்க...''

''ஆகட்டும்னா... ஏற்பாடெல்லாம் செய்ய வேண்டியதுதானே...''

''உம்... செய்யுங்க...''

''சபாஷ்... அதான் பொழைக்கிற புள்ளே... இந்தா... இப்போ இதை வச்சுக்க, இனிமே ஒனக்கு நல்லகாலம் தான்...'' என்று அவனிடம் இரண்டு பத்து ரூபாய் நோட்டுகளை நீட்டினான்.

அந்த இளைஞனின் மனம் எதிர்காலத்தைப் பற்றி பல இன்பக் கோட்டைகளை எழுப்பி மகிழ்ந்தது!

அவன் பிழைக்கப் போகிறானாம்!

ஃ ஃ ஃ

''ஐயோ!... கொளும்புக்கா? என்னை விட்டுட்டா''? ...அவன் மார்பில் முகம் புதைத்து விம்மினாள் அவன் மனைவி.

அவளுக்கு பதினெட்டு வயதுதான். போன வருஷம் தான் கல்யாணமாச்சு... அவள் வந்து வீட்டில் விளக் கேற்றிய நேரமோ என்னவோ... அவன் வேலையில் மண் விழுந்தது! காலம் அந்தத் தம்பதிகளைப் பார்த்து கொடூர மாக நகைத்தது. கண்ணீரில் பசியாற முடியுமானால் அவர்களுக்குக் கவலையே இல்லை.

உள்ளூரில் பட்டினி கெடந்து சாகிறதை விட எங்காவது கண்காணா தேசத்துக்குச் சென்று பிழைக்க

லாம், என்று அவன் நினைத்தாலும் போவதற்குத் தைரிய மில்லை. கட்டிய மனைவியையும், பெற்ற தாய் தகப்பனையும் விட்டுப் பிரிய அவன் மனம் போதிய பலம் பெறவில்லை.

அப்பொழுதுதான் அங்கு வந்தான். சரிகை அங்கவஸ்திரக்காரன்— சிலோனில் கொள்ளையடிக்கும் 'தமிழ் மார்வாரி'யின் ஏஜண்ட்।

அவன் சொன்னதெல்லாம் உண்மையா?... இலங்கையி லுள்ள தமிழ் முதலாளிகளுக்கு உண்மையிலேயே தமிழர்கள் மீது அபிமானம் ஏற்பட்டுவிட்டதா?... தமிழர்கள் 'பிழைத்துப் போகட்டும்' என்ற தயாள மனப் பான்மையா?...

இல்லை;...

சிங்களத்தார்கள் சோணாகிரிகளல்லர்; அங்குள்ள தொழிலாளிகள் மன்னார்சாமித் தொழிலாளர்களல்லர்! ஷாப் சட்டத்தை ஏய்ப்பதற்குத் தமிழ் முதலாளியுடன் சேர்ந்துத் தாளம்போட 'மாட்டார்கள். லெட்ஜரில் ஒரு கணக்கு— கொடுக்கும் சம்பளம் அதில் பாதி... என்றால் மிகுதிக்கு அது ஜவுளிக் கடையானால் இரண்டு பீஸ் துணி எடுத்துக்கொண்டு போய்விடுவான் வேலைக் காரன்...

இல்லாவிட்டால்... அவர்கள் மூதாதையர்கள் 'லங்கா தகன' அனுபவசாலிகள் என்பது 'தமிழ் மார்வாரி' களுக்குத் தெரியும்

இதைச் சமாளிக்க, தமிழ் மக்களை ஏமாற்றி அழைத்துச் சென்று தங்கள் தொழிற்சாலைகளுக்குள்ளோ கடைகளுக்குள்ளோ காலம் முழுதும் அடிமைகளாக அடைத்து வைத்து நாள் முழுதும் மிருகங்களாக உழைக்க வைத்து, பணம் சம்பாதிக்கிறார்கள். இந்த அடிமை களுக்குச் சம்பளம் கிடையாது! வெளியுலகைக் காண உரிமை கிடையாது!

சம்பளம் கேட்டால், எதிர்த்துப் பேசினால்... 'இதோ கள்ளத்தோணிக்காரன்' என்று அவர்களே போலீசுக்குக் காட்டிக் கொடுத்து விடுவார்கள்.

இந்தச் சிறையில் எண்ணற்றவர்கள் சிக்கிக் ள் கின்றனர்!

அப்படிப் பட்ட நரகத்தில், துயரப் படுகுழியில் ஏழைகளைத் தள்ளுவதற்காக இருக்கும் கங்காணிகளுக்குக் 'கைக்காசு' உண்டு!

இதெல்லாம் அவனுக்குத் தெரியுமா?... அவன் மனைவிக்குத் தான் தெரியுமா?... ஆனால் இருவருக்கும் பிரிவுதான் சகிக்கவில்லை!

"வேண்டாங்க... இங்கேயே ஏதாவது வேலைப் பார்த்துக்கிட்டு எப்படியோ காலந்தள்ளலாம்..." என்று விம்மலுக்கிடையே கூறினாள் அவன் மனைவி!

"அடி பைத்தியம்!... கொளும்புன்னா நீ என்னன்னு நெனைச்சே... ஃதோ... கோடிக்கரையிலிருந்து இருபத்தஞ்சி மைல்தான் யாழ்ப்பாணத்துக்கு; இங்கேருந்து கும்ப கோணத்துக்குப் போற மாதிரி..."

"என்னெ இந்த நெலையிலே விட்டுட்டுப் போக ஒங்களுக்கு மனசு வருதா?..." அவள் மீண்டும் விம்மினாள் அநதப் பசலை உடம்பு விம்மிக் குலுங்கிற்று! அவன் மார்பெல்லாம் கண்ணீர்க் கறை!

ஆதுரத்துடன் அவள் முகத்தை நிமிர்த்தினான். சிம்னி விளக்கின் மங்கிய ஒளியில் நீர்நிறைந்த அழகிய விழிகள் ஜ்வலித்தன! முகம் சிவந்து உதடுகள் துடித்தன...

அவள் முகம் தாய்மையின் கனிவு நிறைந்து ஏங்கிற்று! அவள் முகத்தோடு முகம் சேர்த்து கீழ்ஸ்தாயியில் தொண்டை கரகரக்க உணர்ச்சியுடன் கூறினான்... வார்த்தைகள் தழுதழுத்தன.

''இன்னம் நாலு மாசத்திலே நமக்கு ஒரு புள்ளை பொறந்துடும் இல்லியா!'' என்று அவன் கேட்கும்போது அவள் வயிற்றுப்பிண்டம் புரண்டு அசைவதில் அவள் மேனி முழுதும் 'கிகிளுளுத்தது'

''கண்ணு... ஒனக்கு மாசா மாசம் பணம் அனுப்ப றேன்... கொழந்தைக்கு வித விதமா கொளும்பு சில்க்லே சட்டைதச்சு அனுப்புவேன்... ஒனக்குன்னு தனியா என்னென்ன வேணும்னு காயிதம் போட்டா அதெல்லாம் வாங்கி அனுப்புவேன்... நீ... ராணி மாதிரி ஆய்டுவே... இல்லியா''...

அவன் அப்படிப் பேசும்போது அவளுக்கு வெட்கமாக இருந்தது.. முகத்தை மூடிக்கொண்டாள்...

''இன்னும் அழறியா?...'' என்றவாறு அவள் கன்னத்தில் முத்தமிட்டான்...

அப்பொழுதுதான் அவள் மீண்டும் அழுதாள்! அவன் போய் விட்டால்... இந்த அன்பு முத்தத்திற்கு ஏங்கித் தவிக்க வேண்டுமே!

''ஐயோ!... வேண்டாம்... எனக்கு நீங்கதான் வேணும்...''

''சே... சே... இது என்ன சொழந்தையாட்டமா? ஆறு மாசத்துக்கு ஒருதடவை வருவேன்... ரெண்டு வருஷத்துக் கப்புறம் இங்கேயே வந்துடப் போறேன்... தைரியமா... இரு... இங்கே ஒவ்வொரு வேளை சாப்பாட்டுக்கும் கஷ்டப்படறதை விட, கொஞ்சம் கஷ்டப்பட்டாலும் அப் புறம் சொகப்படலாம்''... மீண்டும் அவளை அணைத்துத் தேற்றினான்...

அவள் முகத்தில் சிறிது நம்பிக்கை! கண்கள் மட்டும் கலங்கி நீரைக் கொட்டுகின்றன!

கிழிந்த கோரைப்பாயில் அவன் படுத்திருக்கிறான். அவன் மார்பில் தலைசாய்த்துச் சோர்ந்து கண்களை மூடு கிறாள் அவன் மனைவி. ஆதூரத்துடன் அவள் சிகையை வருடுகிறான் அவன்... பிறகு அவள் சிரத்தில் முத்தமிடு கிறான்... அவள் அயர்ந்து உறங்குகிறாள்... அவள் இதழ்க் கடையில் குறுநகை நெளிகிறது! மனம் இன்பக் கனவுகளில் கிறங்கிச் சுழல்கிறது.

...அதோ, அவன் கொளும்புவிலிருந்துத் திரும்பி வரு கிறான். அவன் உடையெல்லாம் நாகரீகமாக மாறி இருக் கின்றன. அவனை அடையாளமே தெரியவில்லை! அவன் பின்னால் வண்டியிலிருந்து பெட்டி, கூடை, முதலிய சாமான்களை இறக்கி வைக்கிறான் வண்டிக்காரன்... உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்க, மார்பு விம்ம வாசலில் வந்து நிற்கிறாள் அவள். வந்தவுடன் அவளை அணைத்துக் கொண்டு உள்ளே செல்கிறான்... தொட்டிலில் குழந்தை உறங்குகிறது. சுகமாக நித்திரை புரியும் குழந்தையை எடுத்து முத்தமிடுகிறான்.

தொட்டிலில் குழந்தையைக் கிடத்திவிட்டு, ஒரு சிறிய பெட்டியை திறந்து அதனுள்ளிருந்து ஒரு வைரமாலையை யெடுத்து அவள் முன் காட்டுகிறான். அவள் ஆச்சர்யத் துடன் விழிக்கிறாள்...

“இப்போ அழு!... அன்னிக்கு நான் போகும்போது அழுதியே... இப்போ அழேன்...” என்கிறான். அவள் கழுத்தில் அதை அணிவித்து அவளை மார்போடு அணைத்து அவள் முகத்தில் இதழ் பதிக்கிறான்!...

அது— அவள் கனவு! கனவு, கனவாகி விட்டது!...

அதோ! காலக்கடலில் ‘விதி’ப்படகு அவனைச் சுமந்து செல்கிறது! கரையோரத்தில் அவன் மனைவியும் பெற் றோரும் நின்று வழியனுப்புகின்றனர். அவன் மனைவி

கண்கலங்கக் கரங்கூப்பி வணங்குகிறாள்... தெய்வத்தைப் பிரார்த்திக்கிறாள்.

படகு, பார்வையிலிருந்து மறைகிறது! முந்தானையை வாயில் அடைத்துக் கொண்டு, குமுறி அழுகிறாள் அவன் மனைவி!

எதிர்கால சுகத்தில் நம்பிக்கை வைத்து தேறுதல் பெறுகிறாள்... தெய்வத்தின் அருள்வேண்டி திடம் பெறுகிறாள். மஞ்சள் கயிற்றை எடுத்து கண்களில் ஒற்றி மன நிம்மதி பெறுகிறாள்... கருவில் உறங்கும் சிசுவின் அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைத்து ஆறுதல் அடைகிறாள்!

படகு, மறைந்தே போய்விட்டது! படகு சென்ற திசையில்திரும்பும் அவள் பார்வையைக் கண்ணீர் மறைக்கிறது! வறுமை வாழ்வை மறைத்து விட்டது...!

ஃ ஃ ஃ

சிங்களத் தீவின் கடற்கரையில் கள்ளத்தோணி பிரயாணிகளின் பிணங்களில் மூன்று கண்டெடுக்கப்படுகின்றன!

தோணிக்காரர்கள் தப்பிவிட்டார்கள்.

பிறகென்ன?... ஆபத்து நேரத்தில் ஆள் கனத்தைத் தோணியில் வைத்துக்கொண்டு அல்லற்படுவார்களா?... தோணிக்குச் சுமை இருந்தால் தப்ப முடியுமா?... நம்பியவர்களை நடுக்கடலில் கைவிட்டுத் தப்பி விட்டார்கள்.

அதோ... கடல் நடுவே, கண்டுபிடிக்கப்படாத இளைஞனின் பிரேதம்... அலை மடியில் முமம் புதைத்து, முக்குளித்து, மூழ்கி, விளையாடி யாத்திரை புரிகிறது அந்தச் சடலம்.

கடலன்னையின் அலைகரங்கள் தாலாட்ட மீளா உறக்கத்தில் ஆழ்ந்து விட்டான் அந்த வாலிபன்.

மனைவியின் எழில் முகத்தை இனிமேல் அவனால் கனவு காண முடியாது. அவளை விட்டு விட்டு வந்ததற்காக ஏங்கி இதயம் வெதும்பிக் கண்ணீர் சிந்த முடியாது. குழந்தைக்கு 'சில்க்' சட்டை அனுப்ப முடியவில்லையே என்று வருந்தி அழமுடியாது அடிமைச் சிறையில் சிக்கி, நரகத்தில் உழன்று, ஏங்கி, இதயம் வெம்பி அணு அணுவாக வதைந்து சாக வேண்டிய அந்தத் துன்ப வாழ்க்கையிலிருந்து அவன் விடுதலை அடைந்து விட்டான்.

கடற்காற்று, சீறிச் சுழன்றது! கடலலைகள் வானை நோக்கி பாய்ந்துச் சாடின... கடலோடு காற்று முயங்கிக் குழப்பித் தற்கெட்டுச் சுழன்றது.

அந்தச் சூறாவளியில் ஓர் சடலம் சுழன்று, திரிந்து அலைகழிகிறது.

அதுதான் பிழைக்கப் போனவனின் கதி.

அவன் மனைவியைக் கேளுங்கள். தன் காதற் கணவன் பிழைக்கப் போயிருப்பதாகச் சொல்லுகிறாள். அவளுக்கு யார் உண்மையைச் சொல்லுகிறார்கள்?

ஏன் சொல்ல வேண்டும்?

தாலிச்சரட்டைத் தடவிப் பார்த்தவாறு ஆறுதல் பெறட்டுமே!

அவள் கணவன் பிழைக்கப் போயிருக்கிறனாம், பிழைக்க...

ஐயோ, ஆண்டவனே, அது என்ன பிழைப்போ!

# 'மீனாச்சி ராஜ்யம்'

**அடிக்கடி அவளுக்குக் குழந்தை தேவையாக இருந்தது. அதற்கென்ன பஞ்சமா?**

**சமுதாயம் அவள் குறைபடாத அளவுக்கு சந்தானபாக்யம் அளித்தது. ஆனால், ஒரே சமயத்தில் அவளிடம் இரண்டு குழந்தைகள் இருந்ததே இல்லை!**

---

'பாரத மாதா' ஒருத்தியை வெகுநாட்களாக எனக்கு தெரியும். அந்த 'பாரத மாதா' பாரதச் சிறுமியாக இருந்தது முதல் அவளை எனக்குத் தெரியும்.

ஆமாம்... அவள் ரத்தத்திலும் பாரதத்தின் புனிதம், கற்பு, வீரம், அனைத்தும் ஓடித்தான் இருக்க வேண்டும் காற்சிலம் பொடித்து மதுரை நகரைக் கருக வைத்த கண்ணகியின் கற்பும், ஜான்சிராணியின் வீரமும் அவளுக்கு மட்டும் இல்லாமல் போய்விட்டால் அவள் இந்த நாட்டில் பிறந்தவளாக இருக்க முடியாது. எனக்குத் தெரிந்த வரை — மீனாட்சியோ அல்லது அவள் பெற்றோரோ அப்படி ஒன்றும் வேற்று நாட்டிலிருந்து வந்தவரல்லர்— ஆகையினால் அவள் பாரததேவியின் புத்திரிகளில் ஒருத்திதான்.

ஃ ஃ ஃ

தினசரி அந்தப் பஸ் ஸ்டேண்டில் அவளைப் பார்ப்பேன். அவளை மட்டும் அல்ல; அவளைப் போன்று இன்னும் சிலரும் புடைசூழ. பஸ்ஸுக்காக காத்து நிற்பவர்

களிடம், "ஸார்... ஸார்... ஸார்..." என்ற யாசக சூத்திரத்தை ஜெபித்துக் கொண்டு கையேந்தி நிற்பாள். அப்பொழுது அவள் 'பாரதச் சிறுமி!'

அழுக்கின் கறை படிந்த நல்ல சிகப்பு நிறம்; மூக்கில் ஒழுகிக் கொண்டே இருக்கும். ஒரு கந்தல் பாவாடை; மேலே சில சமயங்களில் ஒரு பீத்தல் சட்டை... பரட்டைத் தலையுடன் நாள் முழுதும் பஸ் ஸ்டேண்டில் சுற்றித் திரிவாள்.

அநேக சமயங்களில் நான்கூட ஒரு காலணாவை அவளிடம் விட்டெறிந்து சென்றிருக்கிறேன்.

அதன் பிறகு...

அவளுக்கு வயது பதினான்கு இருக்கும். இப்பொழுதும் அதே நிலையில்தான் பஸ் ஸ்டேண்டைச் சுற்றிக் கொண் டிருக்கிறாள். கந்தல் சட்டைதான் உடுத்தி யிருக்கிறாள்— பீத்தல் பாவாடைதான். மேலாக்கு ஒன்று அவள் மார்பை மறைத்திருக்கிறது. அவள் இளமை, கந்தல் சட்டையை நெருடுவதை அவள் உணர்ந்து விட்ட பருவம் அது.

இப்பொழுதெல்லாம் அவளை யொத்த சிறுவர்கள் அவளைச் சுற்றி வருகின்றனர்... குறும்பு செய்கின்றனர்... பஸ் பிரயாணத்திற்குக் காத்திருக்கும் சில 'கனவான்கள்' கூட அவளைக் குறும்பாகப் பார்ப்பதில் அர்த்தமிருக் கிறது... அவள் பிச்சைக்காரி... அது மட்டுமா, சிகப்புத் தோல்... பருவ மெருகு... அழகாகத்தான் இருக்கிறாள்... அசடாகவும் இருக்கிறாள்... அல்ல. அசடு போல நடிக்கி றாள்... அவளுக்குத் தெரியும். இந்த வெள்ளை வேட்டிக் காரர்களின் உள்ளம்... ஆமாம்... அவளுக்கு வயது பதினான்குதான்! அவள் இன்னும் 'மனுஷி' யாகவில்லை. அதனாலென்ன 'ஓவர் பிரிட்ஜ்' ஒய்யாரக் கொண்டை காரிகளுக்கெல்லாம் அவளிடம் வியாபாரப் போட்டி!

அவர்களைவிட இவளுக்குக் கிராக்கி அதிகம் என்பதில் அவர்களிடையே புகைச்சல்!...

'உனக்கு எப்படித் தெரியும்?' என்று என்னைக் கேட்கிறீர்களா?...

ஐயோ! அவர்களுக்கிடையே சண்டை வரும்பொழுது பார்க்க வேண்டுமே அந்த உண்மைகள் அம்பலமாவதை? அப்பொழுது புரியும்.

ஆனால் மீனாச்சியிடம் நடக்குமா?...ஒரு கை பார்த்து விடுவாள். போலீஸ்காரன் சலுகைகூட மீனாச்சிக்குத் தான்.

முன்பெல்லாம் 'இதேதடா சனியன்' என்று ஒதுங்கி நின்றவர்கள்கூட இப்பொழுது 'எங்கே? அந்தப் பிச்சைக் காரக்குட்டியைக் காணோமே...!' என்று மனத்திற்குள் கேட்டுக்கொண்டு சுற்றிச் சுற்றிப் பார்த்தனர்.

பஸ் ஸ்டேண்ட் அருகே உள்ள வெற்றிலைப் பாக்குக் கடையருகே அவள் நின்றவுடன் தண்ணீரை வாரி இறைக்கும் நாயர்கூட இப்பொழுது அவளுடன் குழைந்து குழைந்து பேச ஆரம்பித்து விட்டார். சிற்சில சமயங்களில் அவளுக்கு ரிக்ஷா சவாரிகூட கிடைக்கிறது! ஹோட்டல் அறை வாசம், எப்பொழுதோ சில சமயங்களில்தான். அனேகமாக பாலத்தடி 'வியாபாரம்'... நாளடைவில் அவள் பிச்சை யெடுப்பதை நிறுத்திக்கொண்டாள்!

இப்பொழுது அவளுக்கும் 'ஓவர் பிரிட்ஜ் ஒய்யாரக் கொண்டைக்காரிகளுக்கும் லடாய் ஏற்படுவதில்லை. ஏனென்றால் அவர்களில் ஒருத்தியாக அவளும் மாறி விட்டாள்

அழகான வாயில் புடவை; மெல்லிய சில்க் துணியில் அடி வயிறும் முதுகுப் புறமும் வெளியில் பிதுங்க மார்பை

இறுக்கி அணிந்த சோளி... அதெல்லாம் கூட அவளுக்கு அழகாக இருக்கிறது என்று திருப்தியடைய முடியாது... சோளியின் கழுத்துப் பட்டைக்கும், நடு மார்புக்கும் இடையே ஒரு அரச இலை அளவுக்கு இருக்கும். 'ஓட்டை'யை மேலாக்கை நீக்கி அடிக்கடிப் பார்ப்பதில் தான் அவளுக்கு ரொம்ப திருப்தி!

அவளுக்கு இப்பொழுது வயது பதினெட்டு!

அவள் கையிலே அன்றாட அபரிமிதச் செலவுக்குத் தேவையான காசு கிடைத்தது... சமயத்தில் அவள் அதிக 'பிகு' செய்வதுமுண்டு.

அக்கா, தங்கச்சி என்று உறவு முறை கொண்டாடி வந்த ரிக்ஷாக்காரர்களுக்கு அவள் மிகவும் உதவியாக இருந்தாள்... அவர்களும் அவளுக்கு உதவினர்.

அந்தப் பேரழகிக்காக டீக்கடை நாயருக்கும், 'பீட்' நிற்கும் போலீஸ்காரர் மன்னாருக்கும் ஒரு தடவை பெரிய சண்டையே வந்துவிட்டது... டீக்கடை நாயர் கோர்ட்டுக்குச்சென்று பத்து ரூபாய் அபராதம் கட்டி வந்தார். நாயருக்கு எதிராக மீனாட்சி சாட்சி சொன்னாள்... என்றாலும் நாயருக்கு அவள்மீது கோபம் இல்லை என்பது அன்று இரவே மீனாட்சிக்கு விளங்கி விட்டது.

ஒரு நாள்...

ஏதோ அவசர வேலையாக எழும்பூர் ரயில்வே ஸ்டேஷன் பக்கம் போனேன். ''என்னாப்பா என்னாப்பா'' யாரோ ஒரு பெண் குரல் என்னை அழைத்தது. அதுதான் மதராஸ்காரர்களின் 'அண்மை விளி!'

மீனாட்சி நின்றிருந்தாள். அவளைச் சுற்றி மூன்று ஸ்திரிகள் நின்றிருந்தனர்.

'புள்ளெத்தாச்சிப்பா இடுப்பு வலி வந்திடுச்சி... ஆசுபித்திரிக்குப் போவனும்; வண்டிக்கி எதினாச்சும் குடுப்பா...'' என்றவாறு ஒரு நடுத்தர வயது ஸ்திரீ கெஞ்சினாள். மீனாட்சி அவர்கள் நடுவே நிறை மாசக் கர்ப்பிணியாகவே நின்றிருந்தாள்.

ஆம்; அவள் உண்மையாகவே கர்ப்பிணிதான்.

ஒரு அணாவை எடுத்துக் கொடுத்துவிட்டு நகர்ந்தேன்.

ஃ ஃ ஃ

இப்பொழுதெல்லாம் மீனாட்சி பிச்சையெடுப்பதை அடியோடு நிறுத்தி விடவில்லை. பிச்சையும் எடுக்கிறாள்.

தானே நேரிடையாகப் பிச்சை எடுப்பதில்லை. அவள் பெற்ற அந்த மூன்று மாதச் சவத்தை ஒரு கிழவி மூலம் வாடகைக்கு விட்டு பிச்சையெடுக்கிறாள் மீனாட்சி.

''ஐயா, தாயில்லாத கொயந்தெங்க...'' என்று கிழவி பஸ் ஸ்டேண்டில் யாசிப்பாள்...

ஓவர் பிரிட்ஜ் அருகே நின்று, மேனி மினுக்கி ரிக்ஷாக் கார நண்பர்களின் உதவினைய நாடி இருப்பாள மீனாட்சி இரவு எட்டு மணிக்கு மேல், உலக ஆண்கள் அனைவரையும் தன் தலைவனாக எண்ணி அவர் தம் வருகை நோக்கி உளம் நையும் 'தமிழ் இதிகாசத் தலைவி' யாக 'ஓவர் பிரிட்ஜ்'... அருகே காத்துக் கிடப்பாள்.

இப்பொழுதெல்லாம் அவளுக்குக் கிராக்கி சற்றே குறைவு. ஆனால் சில நாட்களில் கிராக்கி முன்போலவே இருக்கும். என்றாலும் இப்பொழுது அவளால் 'பிகு' பண்ண முடிவதில்லை! 'டீ'க்கடை நாயர் அவளைத் திரும்பிக்கூடப் பார்ப்பதில்லை.

ஃ ஃ ஃ

திடீரென்று ஒருநாள் அவள் குழந்தை செத்து விட்டது.

அடடே! மீனாச்சி கூட அழுதாள்... அதன் மூலம் அவளுக்கு தினம் நான்கணா, சமயத்தில் ஆறணா கூட வரும்படி வந்ததே! என்னதான் இருந்தாலும் அதற்கு வயத்திலே கொஞ்சம் பசை இருந்தால்தானே பிச்சை யெடுக்கும் இடத்தில் சிணுங்கியாவது அழ முடியும்?

காலையில் குழந்தைக்கு உடம்பு அனலாகக் கொதித்தது... மத்தியானமெல்லாம் 'வீர்... வீர்' என்று கத்தியது. அந்த சமயத்தில் வருமானம் எட்டணா வரை யில் எட்டி விட்டது... மாலையில் அழுகை நின்றது... ஜுரம் குறைந்தது... பிறகு நெஞ்சுக் கூட்டுக்கும் மேல் வயிற்றுக்கும் இடையே 'குடுக்' 'குடுக்' கென்று குதித்துக் கொண்டிருந்த ஆவி ஓடிவிட்டது!

மீனாச்சி அழுதாள்!

மறு நாள் காலை... பிளாட்பாரத்தின் ஓரத்தில் மஞ்சள் துணியில் சுற்றி வைக்கப்பட்ட அந்த எலும்புக் கூட்டினருகே ஒரு புதிய மண் சட்டி... ''சார்...தர்ம சாவு... தர்ம சாவு சார்''... என்று போவோர்... வருவோரிடம் ஓடி ஓடி அவர்கள் திருஷ்டியை அந்தச் சவத்தின் பால் திருப்பி காலணாவைச் சுறக்கும் ரிக்ஷாக்காரப் பிச்சைக் காரர்கள்! சுவரருகே முகத்தை முந்தானையால் மூடிக் கொண்டு மீனாச்சி உட்கார்ந்திருக்கிறாள்...

போவோர் வருவோர் அனைவரும் 'நமக்கென்ன' என்று போகிறார்கள். அன்று, அவள் பாலத்தடியில் சிங் காரித்துக் கொண்டு நின்றிருந்தபோது அவர்களால் 'நமக் கென்ன' என்று போக முடியவில்லை. அவர்களுக்குத் தெரியுமா? வயது வந்த ஆண்கள் ஒவ்வொருவரும் அச் சவத்திற்குத் தகப்பன் என்கிற விஷயம்! எவனாவது ஒருவ

னுக்குப் பிறந்ததுதானே அதுவும். புத்திர பாசத்தால் அழும் ஒருவனைக் கூடக் காணோமே! சீ! என்ன மனிதர்கள்!

...மான வெட்கமில்லாமல் 'டீக்' கடை நாயர் அட்டகாசமாகச் சிரித்துக்கொண்டு யாருடனோ பேசுகிறான்...

தன் மனைவிக்கு எப்படிப் பிறந்தாலும் தன் குழந்தை என்று நினைக்கும் பரமாத்மாக்களும், வேறு எங்காவது பிறந்தால் தன்னுடையதேயானாலும் எவனுடையதோ என்று எண்ணிக் கொள்ளும் அளவுக்கு ஆண்கள் சுயநல மற்றவர்களாக மாறி விட்ட பிறகு பெண்களுக்கு வேறென்ன வேண்டும்?

ஃ ஃ ஃ

மீனாச்சி மீண்டும் கர்ப்பிணி ஆனாள்!

கர்ப்பிணியாகச் சம்பாதித்தாள்! குழந்தையை வாடகைக்கு விட்டுச் சம்பாதித்தாள்!

குழந்தையின் சவத்தைக் காட்டிச் சம்பாதித்தாள்!

அது அவளுக்கு ஒரு விளையாட்டாக — ரொம்ப சாதாரணமாக ஆய்விட்டது.

அவள் குழந்தை இருந்தாலும் ஏதோ சில காசுகள்!— அவள் குழந்தை இறந்தாலும் ஏதோ சில காசுகள்!

அடிக்கடி அவளுக்குக் குழந்தை தேவையாக இருந்தது.

அதற்கென்ன பஞ்சமா?

சமுதாயம் அவள் குறைபடாத அளவுக்கு சந்தான பாக்யம் அளித்தது!

ஆனால் ஒரே சமயத்தில் அவளிடம் இரண்டு குழந்தைகள் இருந்ததே இல்லை!

அவளும் எட்டு குழந்தைகள் பெற்று சம்பாதித்து, புதைத்து விட்டாள்!

ஃ ஃ ஃ

அதோ பாருங்கள்...

கையிலொரு பச்சிளம் சிசுவை ஏந்திக்கொண்டு...

'ஐயா... தாயில்லாத கொயந்தைங்க'' என்ற யாசக வாசகத்துடன் போவோர் வருவோரை கெஞ்சுகிறாள் மீனாச்சி.

இப்பொழுது அவளுக்கு வயது நாற்பதுக்கு மேலாகிறது. கிழவியாகி விட்டாள். இப்பொழுதும் கூட சில சமயங்களில் அவள் அழகாக சிங்காரித்துக் கொள்கிறாள். கிழவி என்பதற்காக அவ்வளவு லகுவில் ஒரு பெண்ணை விட்டு விடுவார்களா என்ன?'

இருந்தாலும் வேறு மீனாச்சிகள் இல்லாதபொழுது இவள் ஜம்பம் சாயும்!

'மீனாச்சி'களுக்கு வயது வித்தியாசம் கிடையாது; ஆனால் 'மீனாச்சி ராஜ்யத்தில்' ஒரு பருவத்தில், கௌரவம் சற்று அதிகமாக இருக்கும். என்றாலும் அதன் பிறகு ஒன்றும் அது போய்விடாது. இருட்டு வயதையா காட்டுகிறது? பகல் எப்படி கழிந்தால் என்ன? 'மீனாச்சி' கள் என்றைக்கும் 'ரிடையர்டு' ஆவதில்லை.

அவர்கள் ஒழியமாட்டார்கள். அவர்கள் சிரஞ்சீவி தன்மை பெற்று வந்தவர்கள்.

பாரத தேவியின திரு அவதாரங்கள் அல்லவா அவர்கள்? எட்டு குழந்தைகளை ஈன்றெடுத்த பாரத மாதா மீனாச்சி அல்லவா?... அவர்களை அழித்துவிடுவது சாமான்யமல்லவே!

# காந்தி ராஜ்யம்

**கண்ணாடிச் சிறைக்குள் தன்னை அடைத்து வைத்திருப்பதை காந்திஜியால் சகிக்க முடிய வில்லை.**

**''ஐயோ! இதைவிட பிரிட்டிஷ்காரனின் இரும்புச் சிறை எவ்வளவோ தேவலாமே'' என்று பொறுமு கிறார். காற்று வேகமாக அடிக்கிறது . காந்திஜி குமுறி எழுகிறார்...**

---

அப்பொழுது, 1932—

நாட்டு மக்களிடையே ஒரு புதிய சக்தி, புதிய வேகம் பிறந்தது. நாலு முழத்துகில் உடுத்திய பொக்கைக் கிழ வரின் சக்திமிக்கச் சொற்களால் இளைஞர் உலகமே ஆகர் ஷிக்கப்பட்டது அந்தக் காலத்தில்.

கத்தியின்றி ரத்தமின்றி யுத்தம் நடத்த எண்ணிய வீரர்கள் வாழ்ந்த வினோத சகாப்தம் அது,

அதே காலத்தில்தான் கதர்க்கொடி பிடித்தவனின், கைகள் முறிக்கப்பட்டன. 'வந்தே மாதரம்' என்று கோஷித்தவனின் வாய் கிழிக்கப்பட்டது.

ஒரு பிடி உப்புக்காக உயிரைத் திரணமாக மதித்த உத்தமர்கள் வாழ்ந்த பொற்காலம் அது.

அப்பொழுது ஒரு நாள் இரவு... மணி பன்னிரெண்டு!

ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஏதோ ஒரு ஆங்கிலேயனின் பெயரால் கட்டப்பட்ட வார்ட்...

ஹாலின் இருமருங்கிலும் கட்டில்களில் நோயாளிகள் படுத்திருக்கின்றனர்.

மங்கலான விளக்கொளி...

ஏழாம் நெம்பர் படுக்கையிலிருந்து திடீரென்று இரவின் அமைதியைக்கிழித்துக்கொண்டு 'வந்தே மாதரம், என்ற குரல் வெறியுடன் அதிர்கிறது.

''வந்தே மாதரம்...''

''மகாத்மா காந்திக்கு... ஜே!''

தேசபக்தன் வேலுசாமி தன்னை மறந்த நிலையில் கூவுகிறான்.

அவன் உடல் முழுதும் கட்டுகள்... மண்டையில் பெரிய தலைப்பாகை போன்று வெள்ளை பேண்டேஜ் சுற்றப் பட்டிருக்கிறது... அதன் மீது சிறிது ரத்தம் கசிந்த கறை.

'அன்னியத் துணியை தீயிலிட்டுக் கொளுத்துங்கள்...' பிரசங்கம் செய்வது போல் கைகளையும் தலையையும் ஆட்டிக் கொண்டு துள்ளிக் குதிக்கிறான். கட்டிலிலிருந்து விழுந்து விடாமலிருக்க அவனைக் கட்டிலோடு சேர்த்துக் கட்டுகிறார்கள் வார்ட் பாய்கள்.

'வந்தே மாதரம்...'

'மகாத்மா காந்திக்கு... ஜே!'

சக்தியுள்ளவரை கூவுகிறான்... கத்திக் கத்தி மூர்ச்சை யாகிறான். ஆழ்ந்த உறக்கம்... நெற்றியில் வியர்வைத் துளிகள் அரும்புகின்றன. லேசாகக் கண் விழிக்கிறான்.

மெல்லிய குரலில் பாடுகிறான் :

'எந்தமாருயிர் அன்னையைப் போற்றுதல்

ஈனமோ அவமானமோ?''...

நர்ஸ் ஒருத்தி அவனருகே வருகிறாள். தர்மா மீட்டரை வைத்துப் பார்த்து, 'சார்ட்' டில் 106 என்ற இலக்கத்தை நோக்கி ஒரு கோடு கிழித்து விட்டுப் போகிறாள்.

ஜுர வேகத்தில் அவன் நிலை தவறிப் பேசுகிறான். கோஷிக்கிறான்...

''மகாத்மா காந்திக்கி... ஜே!''

'வந்தே மாதரம்...'

அதே கோஷத்தை அன்னியத் துணிக்கடைக்கு முன் நின்று கோஷித்ததனால்தான் அவனுக்கு இந்நிலை ஏற்பட்டது...

அந்தப் படையின் முன்னணி வீரனான அவனை அடித்து நொறுக்கினர்...

சர்க்கார் ஆஸ்பத்திரியில் இருபத்தி நாலுமணி நேரமும் அந்தக் கோஷம் ஒலிக்கிறது! இப்பொழுது அவனை யார் என்ன செய்ய முடியும்?

ஃ ஃ ஃ

அன்று காலை... வேலுசாமிக்கு ஜுரம் சற்று குறைந்திருந்தது. அதாவது 106-லிருந்து 103-க்குஇறங்கியிருந்தது. பிரக்ஞை இருந்தது... நிலை தடுமாறி மனம்போன போக்காகப் பிதற்றவில்லை: கூச்சலிடவில்லை.

அருகே நின்றிருந்த போலீஸ்காரனைக் கண்டதும், தான் கைதியாக இருப்பது நினைவுக்கு வந்தது...

தன்னைச் சந்திக்க வந்த நண்பர்களைப் பார்த்துப் பேச முடிந்தது...

அப்பொழுதுதான் அந்தச் செய்தி வந்தது...

அதுதான்... அவன் மனைவிக்கு நேற்று இரவு ஆண் குழந்தை பிறந்த செய்தி!

அதைக் கேட்டபொழுது அவனுக்கு எத்தனை ஆனந்தம்! ஆனால் எழுந்து நடக்க முடியவில்லை. கட்டிலிலிருந்து அசையவே முடியாது... குழந்தையை அருகே கொண்டு வந்தால் கூட, அவனால் கை நீட்டி வாங்க முடியாது!... ஏன் தெரியுமா? அவன் சுதந்திரம் விரும்பினான்!

பாவம், அவன் மனைவி என்ன கஷ்டப்படுகிறாளோ?... உதவிக்கு யார் இருக்கிறார்களோ?... என்று மனம் குழம்பினான்.

எது எப்படியானாலும் இனிமேல் அவன் எழுந்து நடக்க வேண்டுமே...

ஆஸ்பத்திரி மணி அடிக்கிறது. அவனைப் பார்க்க வந்த நண்பர்கள் அனைவரும் விடை பெற்றுக் கொள்கிறார்கள்.

வேலுச்சாமியைத் தனிமையின் ஏக்கம் பிடித்துக் கொள்கிறது.

கண்களை மூடுகிறான்.

கண்களுக்குள்ளே ஏதோ ஒரு ஒளி பரவுகிறது. கனவின் அலைகளாடும் அவன் லட்சியத் திரை விரிகிறது... அவன் மானசீகக் கனவுகள் அதில் ஒளி வீசிப் படர்கின்றன. கண்களை இருள் கவ்வுகிறது... கண்களுக்குள் நிலவின் குளுமையில் கனவுக் கோட்டைகள் உயர்கின்றன.

பாரத தேசத்தில் ஸ்வாதந்தர்ய ஒளி படர்கிறது!

பாரதத் தேசம் ஸ்வராஜ்யம் பெற்றுவிட்டது!

ஸ்வந்திர பாரதத்தில் தேசப்பிதா காந்திஜி பேசுகிறார்;

"பாரத மக்களே!... இந்த நாடு உங்கள் நாடு! ஏழை பாரதம்!... என்றாலும் எங்களுடைய பாரதம் என்று நெஞ்சு நிமிர்த்திக் கூறிக் கொள்ளலாம்..."

"இங்கே அன்புதான் சட்டம்; ஒற்றுமைதான் படை அகிம்சையே நம் சக்தி மிக்க ஆயுதம்!..."

"நீங்கள் ஸ்வதந்திர புருஷர்கள்... நீங்கள் இந்த தேசத்தின் எஜமானர்கள்... போலீஸ்காரர்களைக் கண்டு அஞ்சவேண்டாம்... கௌரவமிக்க உங்களுடைய ஊழியர்கள் அவர்கள்...

"மக்களுக்கு சேவை செய்ய மக்களால் நியமிக்கப் பட்ட மக்களின் வேலைக்காரர்கள்" என்பதில் அவர்களும் கௌரவமடைகிறார்கள்... ஸ்வதந்திர பாரதத்தில் எல்லோரும் சமம்...

வேலுச்சாமியின் நெஞ்சு வெற்றிப் பெருமிதத்தால் உயர்கிறது.

"என் மண்டையைப் பிளந்து என்னை ரத்த வெள்ளத்தில் மிதக்கவைத்த மூர்க்கனே, நீ மக்களின் வேலைக்காரனாகி விட்டாய். அது போதும்! உன்னை நான் பழி வாங்கி விட்டேன்..." என்று இறுமாந்து கோஷிக்கிறான்.

அதோ, ஒரு காந்தி ராஜ்யப் போலீஸ்காரன் வருகிறான். அவன் கையில் துப்பாக்கி இல்லை; குண்டாந்தடியும் இல்லை அகிம்ஸையே அவன் ஆயுதம்; அவன் வாழ்வது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலல்ல; சூரியாஸ்தமனமும், சூரியோதயமும் முறையாக நடக்கும் காந்தி ராஜ்யத்தில் வாழ்கிறான். அவன் மக்களுக்கு சேவை புரிவதில் பெருமையடைபவன்.

ஒரு போலீஸ்காரன், வெயிற்காலமானதால் சைனா பஜாரில் தண்ணீர்ப் பந்தல் நடத்துகிறான். அன்று ஒவ்வொருவனையும் மூர்ச்சித்து விழும்வரையும் அதற்கு மேலும் மிருகம் போல் தாக்கிய அந்த இரக்கமற்ற நெஞ்சு உடையவன் இன்று வெய்யிலில் செல்வோருக்குப் பணி விடை புரிகிறான்.

காந்திஜியின் கருணை பொழியும் பார்வை, அவனை மாற்றிவிட்டது அவன் வாழ்வது காந்தி ராஜ்யத்தில்...

அதோ; அந்தக் கிழவி வருகிறாள்... அவள்தான் ஆரஞ்சுப் பழம் விற்பவள்...

அவளைக் கண்டவுடன் வேலுச்சாமியின் மனம் நன்றி கூறுகிறது. ''எனக்குப் பணிவிடை செய்ததற்காக மூன்று மாதச் சிறைத் தண்டனை பெற்ற தாயே! நாம் வென்றுவிட்டோம்'' என்று நெஞ்சில் நன்றி கனிகிறது. அதோ, அந்த ஜார்ஜ் சிலையருகே அவன் வருகிறான். அவன் அடிபட்டு நினைவிழந்து அங்குதான் வீழ்ந்திருந் தான்.

பாவம்! தலையில் சுமக்க முடியாத பாரத்துடன் அசைந்து அசைந்து நடக்கிறாள்.

''பாட்டீ... பாட்டி...'' என்று கத்திக்கொண்டே ஓடி வருகிறான் அவள் பேரன்மார்களில் ஒருவன்.

அவன் யார் தெரியுமா? அன்று கூந்தலைப் பிடித்து அவளை அலங்க மலங்க இழுத்துச் சென்றானே அந்த இன்ஸ்பெக்டர்!

''ஐயோ! பாவம்... ஏம் பாட்டி இவ்வளவு சிரமப்பட்டு தூக்கியாறே... அங்கே யாரும் போலீஸ்காரங்க இல்லியா?... நான் தூக்கியாறேன் பாட்டி...'' என்கிறான் இன்ஸ்பெக்டர்.

''ஏண்டாப்பா... நம்ம காந்தி ராஜ்யத்திலே நீங்க எவ்வளவு மாறிப்பூட்டீங்க... அப்பல்லாம்...''

''அதெல்லாம் மறந்துடு பாட்டி...'' என்று கூறும்பொழுது அவள் கண்கள் கலங்கின.

''அட, புத்திகெட்ட புள்ளெ. இதுக்கா அழறே? இப்போ நமக்குள்ளே எவ்வளவு ஒத்துமை... எல்லாம் அந்த காந்தி மகான் கருணை...''

''சரி... கூடையைக் குடு பாட்டி... பாவம் தள்ளாத வயசிலே நீ கூடையைத் தூக்கிக்கிட்டு நடக்கறே... நா' சும்மா வரேன்... யாராவது பார்த்தா சிரிப்பாங்க...'' என்று தன் தலையிலிருந்த தொப்பியைக் கழட்டிக் கொண்டு, கூடையைச் சுமந்து கிழவியின் பின்னால் ஓடுகிறான் இன்ஸ்பெக்டர். அதாவது அவள் பேரன்.

ஆகா! காந்தி ராஜ்யத்தில் என்ன சமுதாயப் பிணைப்பு... ஒற்றுமை... பரஸ்பரம் அன்பு... மதிப்பு... மரியாதை!... என்ன சமத்துவம்...

வேலுசாமிக்கு நெஞ்சு நிறைந்த பெருமிதம். ''இந்த சுவர்க்கத்தில் நான் வாழாவிட்டாலும் என் பிள்ளை வாழ்வான்,... நேற்று பிறந்திருக்கிறானே, என் மகன்—அவன் வாழ்வான். என்னை அடித்து நொறுங்கிய அந்த ஆங்கிலோ - இந்திய சார்ஜென்ட் என் பிள்ளைக்கு சேவகம் செய்யப் போகிறான்...

அதோ அந்த சார்ஜண்ட் பிள்ளைகளைப் பள்ளிக்கு அழைத்துச் செல்கிறான். குழந்தைகளைப் பாதுகாத்து அழைத்து வருகிறான்... அவன் இப்பொழுது மக்களின் சேவகன்... குழந்தைகளின் புத்தக மூட்டையைச் சுமந்து செல்கிறான்... காந்தி ராஜ்யத்தில் பிள்ளைகளுக்குக் கட்டாயக் கல்வி போதிக்கப்படுகிறது. ஏன்... மக்கள் ஸ்வதந்திர பாரதத்தின் எஜமானர்கள்— காந்திஜிதான் சொல்கிறார்.

காந்திஜி சேரி கூட்டுகிறார். ஒவ்வொரு காந்தீயத் தொண்டனும் தெருகூட்டுகிறான் என்றால், ஸ்வதந்திர பாரதத்தில்— மக்களின் சேவர்களான போலீஸ்காரர்கள் தொண்டு செய்யத்தான் செய்வார்கள். அதில் கேவலமில்லை; கௌரவமிருக்கிறது!

சேரி கூட்டுபவன்— மக்களின் சேவகன். போலீஸ்காரன் பொதுஜனத் தொண்டன். இந்தியா முழுவதுமே ஒரு உன்னத ஆஸ்ரமமாகத் திகழப்போகிறது. அதுதான் காந்தி ராஜ்யம்

அதோ, காந்தி ராஜ்யம் ஸ்தாபிதமாகிறது. அந்தப் புனித ராஜ்யத்தை ஸ்தாபிக்கும் போராட்டத்தில் ரத்தம் சிந்திய பெருமை எனக்குமுண்டு! அதில் நான் உயிர்த் தியாகம் செய்யவும் தயார். என் மகன் ஸ்வதந்திர பிரஜையாக வாழட்டும்...

அதோ, அந்தப் புனித சாம்ராஜ்யக் கொடி 'சலசல'த்துப் பறக்கிறது.

வேலுசாமியின் இதயச்சுமை குறைகிறது.

கனவுகள் வேலுசாமியின் மார்பைத் தழுவுகின்றன. அழுத்துகின்றன... அவன் இதயம் குளிர்கிறது... உடலில் ஜுரமும் குறைகிறது.

103., 102., 101., 100., 99., அதற்கும் கீழே...சார்ட்டில் கோடுகள் கீழ்நோக்கிப் பாய்கின்றன...

அவன் உள்ளம் குளிர்ந்ததுபோல் உடலும் குளிர்ந்து விட்டது. அவன் கண்கள் கனவுகளில்—ஸ்வதந்திரக் கனவுகளில் லயித்து ஆழ்ந்து விட்டன.

பிறந்த பொன்னாட்டின் பெருமையை உயர்த்த ரத்தம் சிந்தினான். வரப்போகும் புதிய சகாப்தத்தை சிருஷ்டிக்கும் பணியில் உயிர்த்தியாகம் புரிகிறோம் என்ற நிம்மதியில் செத்துவிட்டான். 'காந்தி ராஜ்யம்' பாரத

மக்களை, தன் பிள்ளையை வாழ வைப்பதற்காக உயிர்த் தியாகம் புரிந்தான் வேலுசாமி!

வேலுசாமியின் சவ அடக்க ஊர்வலம் பிரும்மாண்டமாக நடந்தது.

அவனைத்தான் புதைத்தார்கள்! அவன் லட்சியத்தை, அவன் கனவுகளையெல்லாம் அவனுடன் சேர்த்துப் புதைத்து விட்டார்கள் என்று அப்பொழுது யாராலும் நினைக்கக்கூட முடியவில்லை.

யார் நினைத்தாலும் நினைக்கா விட்டாலும் அவர்கள், அவன் லட்சியத்தை அவன் காந்தி ராஜ்யத்தைப் புதைத்தே விட்டார்கள்!

1954—

வேலுசாமியின் கனவு 'பலித்து' எட்டு ஆண்டுகளாகி விட்டன. ஆமாம்... இப்பொழுது நடப்பது காந்தி ராஜ்யம்— காந்தி சகாப்தம்.

அதோ, சைனாபஜார்! கொள்ளை வியாபாரிகளின் வெள்ளை மாளிகைகளின் மீது மூவர்ணக் கொடி— ஸ்வதந்திரக் கொடி அசைந்தாடுகிறது.

எந்தக் கொடியைப் பிடித்துக்கொண்டு ஸ்வதந்திர வெறியுடன் 'அன்னியத் துணியை வாங்காதே' என்று வேலுசாமி கோஷித்தானோ, அதே கொடி, அன்னியப் பொருளை விற்ற வியாபாரிகளின் சென்னியில் நிழல் வீசுகிறது.

சைனாபஜாரில் அந்த வர்த்தக மாளிகையின் நிழலில்— பிளாட்பாரத்தில்— ஓர் இளைஞன். அவனைத் தெரிகிறதா?

அவன் தான் வேலுசாமியின் வாரிசு!

காந்தி ராஜ்யத்தில் அவன் பிச்சை யெடுக்காமலிருக்கிறானே, அது போதாதா?

''எடு சார்... எடு... கண்ணாடிகிளாஸ்... மூணு, ஒரு ரூபா மூணு, ஒருரூபா... பௌண்டன் பேனா எது எடுத்தாலும் ஆறணா ஆறணா... எடுசார்... எடுசார்...'' என்று பிளாட்பாரத்தில் கடை பரப்பிக்கொண்டு அமெரிக்க சாமான் விற்கும் அந்த இளைஞன் யார்?... அன்னியப் பொருட்களை பகிஷ்கரிக்கும் ஸ்வதேசி இயக்கததின் முன்னணியில் நின்றுப் போராடி உயிர் துறந்த தியாகி வேலுசாமியின் அருமைப் புதல்வன்.

''எடுசார்... எடு... அமெரிக்கன் கூலிங்கிளாஸெல்லாம் முக்கால் ரூபா... முக்கால் ரூபா... வேலுசாமியின் புதல்வன் ஸ்வதேசிப் பொருட்களைப் பகிஷ்கரிக்குமாறு மக்களைத் தூண்டுகிறான் காந்தி ராஜ்யத்தில்

அதோ, லாத்திகளைச் சுழற்றிக் கொண்டு அந்தப் போலீஸ்காரர்கள் ஏன் ஓடி வருகிறார்கள்?...

அன்னியப் பொருட்களை விற்பவர்மீது நடவடிக்கை எடுக்கப் போகிறார்களா?...

அப்படியானால் அந்தப் பெரிய கடையில் விற்கப்படுகின்றனவே, அவை?...

அல்ல; அல்ல...ஆரஞ்சுப்பழம் விற்கும் கிழவிகூட ஓடுகிறாளே!

பிளாட்பார வியாபாரிகள் அனைவரும் தங்கள் கடைகளைச் சுருட்டிக்கொண்டு ஓடுகிறார்கள்...

''எடுசார்... எடுசார்... மூணு கிளாஸ் ஒரு ரூபா...''

''டே... போலீஸ்...''

''ஐயோ...'' தன் கடையைச் சுருட்டிக்கொண்டு ஓட யத்தனிக்கிறான் வேலுசாமியின் புதல்வன். அதற்குள் ஒரு போலீஸ்காரனின் பிடி அவன் பிடரியை நெருக்குகிறது.

''சார்... சார்...''

''என்னடா... சார்...உம் நடடா ஸ்டேஷனுக்கு!''... என்று நெட்டித் தள்ளிக்கொண்டு போகிறான் போலீஸ் காரன்.

இந்தச் சமுதாயத்தில், இந்த ராஜ்யத்தில்தான் இவனை வாழவைக்க வேலுசாமி ரத்தம் சிந்தினான்; தான் பெற்ற பிள்ளையை, தன் மனைவியைப் பார்க்கமுடி யாத நிலையில் உயிர்துறந்தான்

அவன் கனவு கண்ட ஸ்வதந்திர பாரதம் இதுதான்!

அதோ ஒரு போலீஸ் ஸ்டேஷன்.

காந்தி ராஜ்யம்தான் நடைபெறுகிறது என்று அறிவிக்க போலீஸ் ஸ்டேஷனில் காந்திஜியின் திரு உருவப் படம் மாட்டப்பட்டிருக்கிறது! அந்தப் படத்தில் 'அகிம்சையே நம் ஆயுதம்' என்ற அவர் வாசகங்கள்!... அதை 'ஊர்ஜிதம்' செய்வதுபோல் அந்த இளைஞனின் கன்னத்தில் ஓர் அறை விழுகிறது.

''போன மாசம் 'பைன்' கட்டினியே அதுக்குள்ளே மறுபடியும் வந்துட்டியா...''

''வேறெ பொழைப்பு இல்லீங்களே...''

''சாவறது தானே...'' என்ற பதிலைத்தான் அவருக்குச் சொல்ல முடிந்தது...

அவர்கள்தான் என்ன செய்ய முடியும். சட்டப்படி நடக்க வேண்டியது அவர்கள் கடமை! சாதாரண மனிதன் ஒருவன் சட்டத்தின் மர்மங்களைத் துருவித் துருவிக் கேட்கும்போது அவர்களுக்கு அப்படித்தான் பதிலளிக்க

முடியும். பிரிட்டீஷ்காரன் காலத்தில் அவர்கள் அப்படித் தானே சொன்னார்கள்!

அவன் கையிலிருந்த அன்னிய வியாபாரப் பொருட்கள் காந்தி ராஜ்யப் போலீஸாரால் பகிஷ்கரிக்கப்படுகின்றன. தரையில் சிதறிக்கிடக்கும் அந்தச் சாமான்களைப் பார்க்கிறான் இளைஞன். அவன் பிழைப்பிலே மண் விழுந்து விடுமல்லவா? அவன் கண்களில் நீர் திரையிடுகிறது. கலங்கிய விழிகளின் பார்வை, சுவரில் மாட்டப்பட்டுள்ள காந்திஜியின் படத்தில் விழுகின்றன. அவன் தேசப் பிதாவை நோக்கி கெஞ்சுவது போல் இருக்கிறது அந்தத் தோற்றம்!

காந்திஜியின் வதனத்தில் சலனமற்ற குழந்தைப் புன்னகை நெளிகிறது.

காந்திஜி சிரிக்கிறார்! அவர் ஏன் சிரிக்கவேண்டும்? காந்திஜியின் கனவு பலித்து விட்டதா, என்ன? இல்லையே!...

காந்திஜியின் பிரசங்கங்கள் அந்தரங்க சுத்தியுடன் செய்யப்பட்டவையாக இருந்திருந்தால், அவருடைய எழுத்துக்கள் ஹிருதய பூர்வமானதாக இருந்திருந்தால்...

ஐயோ! அவர் இப்பொழுது கண்ணீர் விட்டுக் கதற வேண்டாமோ?

காரண காரியமில்லாமல் அவன்மீது அடிகள் விழுகின்றன.

''காந்தி சொன்னதை மறந்து என்னை அடிக்கிறீங்களே...'' என்று அவன் அலறுகிறான். ''ஓஹோ... காந்தி இவருகிட்டத்தான் வந்து சொன்னாரு...'' 'சீ... நாயே, வாயை மூடு!''

''இல்லே... நெசமா எங்கப்பாகிட்டே சொன்னாரு... எங்கப்பா...''

''இவங்கப்பனுக்கும் காந்திக்கும் மாமன் மச்சான் உறவு. பிச்சைக்காரக் கழுதை'' என்று உறுமுகிறார் இன்ஸ்பெக்டர்...

காற்று வேகமாக அடிக்கிறது... சாதாரணக் காற்றல்ல... புழுதிக்காற்று, அந்தக்காற்றில் வேலுசாமியின் ஆவி சிரிக்கிறது. காற்றோடு காற்றாய் இழைந்து காந்திஜியின் படத்தில் மோதுகிறது. அவரைப் பிடித்து குலுக்குகிறது அதனூடே ஏமாற்ற மிக்க சிரிப்பு— வேதனை சிரிப்பு சீறுகிறது!

''ஆமாம்... காந்திஜிக்கும் வேலுசாமிக்கும் இருந்த உறவு ரத்தாகி விட்டது! புதிய உறவு பிறந்து விட்டது!'' என்று அந்த ஆவி சிரிக்கிறது.

''காந்திஜி அவர்களே! அகிம்சையே நம் ஆயுதம் என்று போலீஸ் ஸ்டேஷனில் எழுதப்பட்டதுதான் காந்தியத்தின் வெற்றியோ! அந்த வெற்றிக் களிப்பில்தான் புன்னகை செய்கிறீர்களோ! கண்களிருந்தால் திரும்பிப் பாருங்கள் உங்களைச் சுற்றித் துப்பாக்கிகள் இருப்பதை!''

காற்று, சுழித்துத் திரும்புகிறது! மீண்டும் ஒரு சிரிப்பு!

காந்திஜி... தாங்கள் செத்துவிட்டீர்கள். அதனாலென்ன? நீங்கள் ஒரு தனி மனிதன்தானா? அன்று பொங்கிப் பிரவகித்த சுதந்திர சக்தியெல்லாம் ஒரு தனி மனிதனுடையதுதானா? வெறும் தனி மனிதசக்தி இருந்தென்ன, இல்லாவிட்டால் என்ன?...

''மகாத்மா அவர்களே! அதோ, கேட்பாரற்ற அந்த ஏழை மகளைப் பாருங்கள் காந்திஜி, பாருங்கள்!... அவன் ஒரு தியாகியின் புதல்வன் என்பது ஒரு புறம் இருக்கட்டும்!

பாரத அன்னையின் புனிதமிக்க புதல்வனல்லவா அவன்? அந்த நிரபாரதியை அவர்கள் அடிக்கிறார்கள் உங்கள் பேரால்! நீங்கள் புன்னகை தவழும் வதனத்துடன் சலன மின்றிப் பார்க்கிறீர்கள்... இதென்ன விடுதலை? இதென்ன சுதந்திரம்? இதென்ன அகிம்சை?'' என்று காற்று சீறிச் சினந்து சிரிக்கிறது!

இளைஞனின் கையிலிருந்த சாமான்கள் பறிமுதல் செய்யப்பட்ட பிறகு அவன் ஸ்டேஷனை விட்டு விரட்டப்பட்டான். அவன் தயங்கித் தயங்கி நின்றான்.

''ஏண்டா நிக்கறே?''...

''சாமான் இல்லாமெ போனா மொதலாளி அடிப்பா ருங்க... இனிமே விக்கலீங்க...'' என்று அழுது கெஞ்சி னான் அந்த ஆண்மகன்.

''போடா... ஒன் மொதலாளியைக் கூட்டிக்கிட்டு வா...'' போலீஸ்காரர்கள் அவர்கள் சட்டப்படி செய்கி றார்கள்... அவர்கள் மேல் என்ன குற்றம்?

''ஐயோ!... முதலாளிக்கு என்ன பதில் சொல்வது?...'' அவனுக்கு ஒன்றும் புரியவில்லை! நெஞ்சைத் துக்கம் அடைத்தது. அந்தப் பஞ்சை மகன் விம்மி விம்மி அழுதான்! ஸ்டேஷனைவிட்டு வெளியேறும் போது கண்ணீர் கலங்கும் விழிகளால் காந்திஜியின் திரு உருவத்தை ஒரு முறை மீண்டும் பார்த்தான்... அந்தப் பார்வை... அதன் அர்த்தம் காந்திஜிக்குத் தெரியும்! உண்மையான காந்தியவாதிகளுக்குத் தெரியும்.

அந்தப் பார்வையில் காந்தியின் வதனம் கறுத்தது.

அதைப் பற்றியெல்லாம் அந்த இளைஞனுக்குக் கவலை இல்லை! அவனுக்கு வேண்டியதெல்லாம் - விற்றுத் தருவ தாக முதலாளியிடம் பெற்று வந்த விதேசிப் பொருட்கள் தான்.

அவை இல்லாமல் அவன் முதலாளியின் முகத்தில் விழிக்க முடியாது... நாளை முதல் அவன் பிழைக்கவும் முடியாது!

வயிற்றைப் பசி, கிள்ளுகிறது... மனதைத் துயரம் குடைகிறது!

மணி பத்தாகிவிட்டது!

அவன் ஜார்ஜ் சிலையின் பாதத்தடியில் தஞ்சம் புகுகிறான்.

அன்று அடிமைப் பாரதத்தில் அவன் தகப்பன் ரத்தம் சிந்திய அதே இடத்தில் இன்று ஸ்வதந்திர பாரதத்தின் புதல்வன் கண்ணீர் சிந்துகிறான்.

அந்தச் சிலையின் லட்சியமே அதுதானே! கண்ணீர் - ரத்தம்!

இன்று கண்ணீர்!... நாளை ரத்தமும் கிடைக்கலாம்!

ஜன சந்தடி அடங்கிவிட்டது! நள்ளிரவு......

இளைஞன் அழுது அழுது உறங்கி விட்டான்.

போலீஸ் ஸ்டேஷனில் காவலுக்கிருக்கும் ஒரு ஜீவனை தவிர மற்றவர்கள் உறங்குகின்றனர்.

இப்பொழுது காந்திஜியால் சிரிக்க முடியவில்லை! அவர் முகத்தில் சோகத்தின் கருமை படர்கிறது. அவர் கண்கள் கலங்குகின்றன. அங்கு மாட்டி வைக்கப்பட்டிருக்கும் துப்பாக்கிகளைக் கண்டு அவர் நெஞ்சு பதைக்கிறது.

''ஐயோ!... என்னை ஏன் இப்படி சித்ரவதை செய்கிறீர்கள்'' என்று அவர் கேட்பது யாருக்குத் தெரிகிறது?

கண்ணாடிச் சிறைக்குள் தன்னை அடைத்து வைத்திருப்பதை காந்திஜியால் சகிக்க முடியவில்லை!...

''ஐயோ, இதைவிட பிரிட்டீஷ்காரனின் இரும்புச் சிறை எவ்வளவோ தேவலாமே...'' என்று பொருமுகிறார்...

காற்று வேகமாக அடிக்கிறது... காந்திஜி குமுறி எழுகிறார்...

சுவரிலிருந்து படம் கீழே விழுகிறது!

கண்ணாடிச் சிறை நொறுங்குகிறது.

காந்திஜிக்கு விடுதலை. காவலாளியின் கண்களில் படாமல் மறைந்து மறைந்து வெளியேறுகிறார்...

ஏழையின் துயரம் அவர் நெஞ்சில் பதிந்து விட்டது... அவருடைய அந்தராத்மா சாந்தியின்றித் தவியாய்த் தவிக்கிறது.

அதோ!... ஜார்ஜ் சிலையில் பாதார விந்தங்களுக்கடியில் அந்தப் பஞ்சை மகன் படுத்துறங்கிறான்.

காந்திஜியின் இதயத்தின் அடி ஆழத்திலிருந்து துக்கம் பீறிட்டு எழுகிறது. மேல் துண்டை வாயில் அடைத்துக் கொண்டு அவனை நெருங்குகிறார்... அனுபவச் சுருக்கம் விழுந்த அம்முதியவரின் மேனி தாங்க முடியாத சோகத்தில் பரிதாபகரமாகக் குலுங்குகிறது!... கம்பை ஊன்றி, கால்கள் தள்ளாட அவனை நெருங்குகிறார்...

அவன் உடலை முடக்கிக்கொண்டு உறங்குகிறான். அவன் கன்னத்தில் 'புண்ணியவாளர்களின்' கைவிரல் முத்திரைப் பதிந்திருக்கிறது.

''மகனே...'' தொண்டை அடைக்கக் கூறி, அவன் கன்னத்தை வருடுகிறார்...

''மகனே...''

அவன் திடுக்கிட்டு விழிக்கிறான்.

''தாத்தா...''

''நான்தான்... காந்தி வந்திருக்கிறேனடா...''

''மகனே... நீ அனுபவித்த துயரத்தை நானும் பார்த்தேன்... இன்னும் கொஞ்சம் காலம் பொறு... என் வார்த்தைகள் பொய்க்காது... அன்னியனிடம் பல நூற்றாண்டுகள் பொறுத்திருந்தோம் நம்மவர்களிடம் சற்று இன்னும் பொறுமை காட்டுவோமே... சத்தியமே வெல்லும்...''

''எனக்கு ஒண்ணும் வேண்டாம் தாத்தா... அந்தச் சாமான்...''

''மகனே நாம் என்னதான் துயருற்றாலும், நாம் வாழ்வது சுதந்திர பூமியில்...''

''ஹூம்... சுதந்திர பூமி... மிஸ்டர் காந்தி, அதற்கு அர்த்தம் என்ன? பூமி சுதந்திரமாகத்தான் சுற்றுகிறது என்று கூறுகிறீர்களா?... அதன் சுதந்திரத்தைப் பறிக்க எவராலும முடியாதே... ஹ் ஹ ஹ ஹா...'' என்று ஒரு மூன்றாம் குரல் வெடிச் சிரிப்புடன் கூறிற்று... காந்திஜியும் இளைஞனும் திகைக்கிறார்கள்...

''மிஸ்டர் காந்தி!... திகைக்க வேண்டாம்... நான்தான் ஐந்தாம் ஜார்ஜ்! தெரிகிறதா''... ஹ ஹ் ஹ ஹ் ஹ ஹ் ஹா...

''ஏன் சிரிக்கிறாய்... இது எங்கள் விஷயம். நீ யார் சிரிக்க? நீ ஏன் இங்கு வந்தாய்?...''

''உன்னைத்தான் நாங்கள் துரத்தி விட்டோமே! 1947-ஆகஸ்ட் பதினைந்தோடு உன் சிரிப்பு ஒடுங்கிவிடவில்லையா?...''

''இல்லை. என்னை நீங்கள் துரத்தவில்லை... வேலுசாமியைப் போன்ற புத்தி கெட்டவர்களின் பொய்யான

லட்சியங்களைத்தான் துரத்தி விட்டீர்கள். மிஸ்டர் காந்தி; எனது லட்சியங்கள் இங்குதான் நிறைவேற்றப்படு கின்றன. என்னுடைய சட்டங்கள், என்னுடைய கட்டளை கள் செயல் புரிகின்றன... நான் எங்கும் போய் விட வில்லை. இப்பொழுதுதான் நான் ஹிமாலயம் போல் வளர்ந்து உங்கள் இந்தியாவை வளைத்து நெருக்கி என் மார்பில் அணைத்துக் கொண்டிருக்கிறேன்... இதில் நான் காணும் அபத்தங்களை ரசித்துச் சிரிக்க, என்னைத் தவிர வேறு யாருக்கு உரிமை?...''

''இல்லை, முப்பத்தியாறு கோடி மக்களின் இதய பீடத்திலும் நான் இருக்கிறேன்... நீ இல்லை...'' என்கி றார் காந்தி.

''ஆம். நான் இல்லை. எனது லட்சியங்கள் இருக் கின்றன. போலீஸ் ஸ்டேஷனில் உங்கள் அகிம்சை இல்லை; நீங்கள் இருக்கிறீர்கள். நான் இல்லை என் துப்பாக்கி இருக்கிறது. காந்தியவர்களே! எங்கே உங்கள் அகிம்சை... உங்கள் வாக்குறுதி... வேலுசாமியின் தியாகத் திற்குப் பரிசு... எங்கே காந்திஜி எங்கே?''

காந்திஜி பின்னால் நகர்கிறார். இளைஞனின் கையை உதறிவிட்டுத் தட்டுத் தடுமாறி ஓடுகிறார். அருவமாக அசைந்து இருளில் மறைகிறார்...

''தாத்தா... தாத்தா...'' என்று கூவிக்கொண்டு அவரைப் பின் தொடர்ந்து ஓடுகிறான் இளைஞன்.

'தம்பீ; தாத்தா உனக்கு எட்டாத லட்சியமடா! ஓடு! ஓடு!'

ஜார்ஜ் சிலை வெறிகொண்டு பேய்போல் சிரிக்கிறது.

காலமெல்லாம் சிரித்துக்கொண்டே இருக்கிறது!

—o—

